Regd. No. M. 4392

ரயிலிலிருந்து சாமான்களை எடுத்து வரவோ வெளியூர்களுக்கு சாமான்களை அனுப்பவோ நீங்கள் சிரமப்பட வேண்டாம். விவரங்களுக்கு எழுதுங்கள்

# ஸ்ரீராம விலாஸ் சர்வீஸ் லிமிடெட்






மதராஸ் & தென் மராட்டா ரயில்வேக்கு லோகல் டெலிவரி கண்ட்ராக்டர்கள்

**202-3, மவுண்டு ரோடு (போன் :-8536) மதராஸ்**

Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press,
116-119, Sladens Garden, Poonamallee High Road, Kilpauk, Madras.




**சாஸ்திரீய முறையினால் கருத்த மேனி வெண்மையாகவும் மாசற்றதாகவும் மாறுகிறது.**

அகத்தினழகை எடுத்துக் காட்டுவது முகம். அம் முகத்தின் கருமையை அறவே நீக்கி துல்லியமான வெண்மையும் பளபளப்பும் அளிப்பதற்கு சாஸ்திரீய ஆராய்ச்சியின் பயனாகக் கிட்டிய "ப்ளோரோஸோன்" ஓர் அபூர்வ வரமாகும். பல அரிய ரஸாயனப் பொருள்கள் சேர்ந்த அமோனுக்ஸிலுடன் ஓஸோன் என்னும் முக்கிய சத்தும் சேர்ந்ததே 'ப்ளோரோஸோன்.' முகப் பொலிவுக்கு இன்றியமையாத இவ்வரிய பொருள் ரோம துவாரத்தூடே வெகு தூரம் சென்று கருத்த சருமத்தை வெண்மையாக்குவதுடன், போதுமான போஷாக்களித்து, பருக்கள் முதலிய கோளாறுகளையும் அகற்றி யௌவனப் பொலிவைத் தருகிறது. 'ப்ளோரோஸோன்' உபயோகிப்பது வெகு சுலபம். முற்றிலும் தீங்கற்றது. ஒரு பாட்டில் இன்றே வாங்கி உங்கள் முக வெண்மையை அதிகரியுங்கள். முழு சிகிச்சை (ஒரு பாட்டில்) ரூ. 4/8-க்கு தங்கள் வியாபாரியிடம் கிடைக்கும். அல்லது ரூ. 4/9 வி. பி. சார்ஜு உள்பட அடியிற்கண்ட விலாசத்திற்கு எழுதுங்கள்.

**'ப்ளோரோஸோன்' தற்போது கான்ஸென்டிரேட்டட் கிரீமாக ஜாடி ஒன்றுக்கு ரூ. 5-12-0க்கு உங்கள் வியாபாரியிடம் கிடைக்கும். அல்லது ரூ. 5/13 வி.பி. சார்ஜ் உள்பட**



எங்கும் கிடைக்கும்.

ப்ளோசி லிட்., த. பெ. 875, பம்பாய்.
சென்னை ஏஜண்ட் டிஸ்ட்ரிபியூடர்கள்:
லைட் இந்தியா ஏஜன்ஸீஸ், 117,
அரமனைக்காரத் தெரு, ஜீ. டி. சென்னை.



# சொந்த சுகாதாரத்திற்கு

ஐடியால், புத்துயிர் அளிக்கும் நறுமணம் கொண்ட, வியாதிகளைத் தடுக்கக் கூடிய மருந்து. வாய் அலம்பவும், தொண்டையில் கொப்புளிக்கவும், ஹலிடோசிஸ் வராமல் தடுப்பதற்கும் அறவே நம்பிக்கையானது.







# ஐடியால்

**உயர்ந்த கிருமி நிவாரணி**

*விற்பனை ஏஜண்டுகள்:*

**பெஸ்ட் & கம்பெனி லிமிடெட்**




## உங்கள் மனதிற்குகந்த "

டிலக்ஸ் டெனுர் சிகரெட்டின் நறு மணத்தை நீங்கள் மிகவும் விரும்பு வீர்கள். உத்தரவாதமுள்ள 100% பொருக்கின வர்ஜீனியா புகையிலை தான் டெனுர் செய்ய உபயோகிக்கப் படுகிறது. இதுவே எல்லோரும் விரும்பி ரஸிப்பதற்கும், தொண் டைக்கு கெடுதல் செய்யா திருப் பதற்கும் காரணம். மனோ ரம்மிய மான இந்த சிகரெட்டை இன்றே வாங்கி நீங்கள் உபயோகியுங்கள்.

டி லக்ஸ் டெனுர் சிகரெட்டு

ஜேம்ஸ் கார்ல்டன் லிட், லண்டன்

**tenor** *is **truly** a de Luxe Cigarette*

JAMES CARLTON LTD, LONDON. EASTERN LICENCEES, POST BOX No. 470, CALCUTTA

# அவன் எங்கெங்கே இருந்தாலும் 'அழுக்கு அபாய'த்திலிருந்து காப்பாற்றப் படுகிறான்

எந்த இடத்தில் வேடிக்கை நடக்கிறதோ, அவ்விடத்தில் அவனை முதலில் காணலாம்! அவனுடைய தாயாருக்கு அவன் எங்கே போயிருக்கிறான் என்பது தெரியாது; ஆனால் அவன் வீடு திரும்பும்பொழுது அவன் உடம்பு முழுதும் அழுக்கு பூசி இருக்கும் என்று அவளுக்கு நிச்சயமாகத் தெரியும். அவன் 'அழுக்கு அபாய'த்திலிருந்து ரக்ஷிக்கப்படுகிறான் என்று தெரியாமல் இருந்தால் அவளுக்கு எவ்வளவு கவலையுண்டாகும். அநேக வருஷங்களுக்கு முன் அவளுக்கு டாக்டர் அழுக்கிலிருந்து கிருமி கேடுகள் உண்டாகின்றன என்று சொல்லியிருக்கிறார். அவர் தவறாமல் குழந்தைகளை லைப்பாய் சோப்பினால் ஸ்நானம் செய்வித்தால் அப்படிப்பட்ட அபாயங்களிலிருந்து காப்பாற்றலாம் என்றும் விளக்கியிருக்கிறார். லைப்பாய் ஓர் விசேஷ தரமான சோப். லைப்பாய் சோப் ஆரோக்கியத்தை ரக்ஷிக்கும் தன்மை யுள்ளது.




## லைப்பாய் நல்ல ஸோப்பைக் காட்டிலும் சிறந்தது அது ஒரு நல்வழக்கம்

இப்பொழுது மெழுகுத் தாளினால் சுற்றி விற்கப்படுகிறது

L. 48-50 TM LEVER BROTHERS (INDIA) LIMITED

# பல சரக்கு



ஹாஸ்ய நடிகர் சார்லி சாப்ளின் கிளி வளர்க்க வேண்டுமென்று விரும்பினார். ஒரு கடையில் ஒரு கிளியை ஏலம் விட்டுக் கொண்டிருந்தார்கள். சாப்ளினும் அங்கே போய் ஏலப் போட்டியில் கலந்து கொண்டார். கடைசியில் ஏலம் முடிந்து கிளியை வாங்கிக்கொண்டு வெளியே வந்ததும் அவருக்கு ஒரு சந்தேகம் உண்டாயிற்று. திரும்பிக் கடைக்குள் வந்து கடைக்காரரிடம் "இந்தக் கிளிக்குப் பேசத் தெரியுமோ?" என்று கேட்டார். கடைக்காரர் சிரித்துவிட்டு "இத்தனை நேரம் ஏலம் கூறிக் கொண்டே வந்தீர்களல்லவா? உங்களுக்குப் போட்டியாக இன்னொரு குரல் ஏலத் தொகையை உயர்த்திக் கொண்டே போயிற்றே, அது அந்தக் கிளிதான்!" என்றார்.





வெள்ளைக்காரர்கள் இந்தியாவுக்கு வந்தால் கிராமப் பிரதட்சணம் செய்வதும், அங்குள்ள குடியானவர்களின் சாமர்த்தியத்தைப் பரிசோதிக்கும் பொருட்டுப் பைத்தியக்காரத்தனமாய்க் கேள்விகள் கேட்பதும் வழக்கம். பெயர்போன ஸைமன் கமிஷன் இந்தியாவுக்கு வந்தபோது அதன் தலைவரான ஸர் ஜான் ஸைமன் மேற்படி வழக்கத்தை ஒட்டிக் கிராம விஜயம்செய்தார். ஒரு குடியானவனைக் கண்டு, "சென்னையிலிருந்து இந்த ஊருக்குப் பதினெட்டு மைல் தூரம். சென்னையில் ரூபாய்க்கு 3½ படி அரிசி விற்கிறது. அப்படியானால் என்னுடைய வயது எத்தனை?" என்று கேட்டார். குடியானவன் சற்று யோசித்தான். பிறகு சட்டென்று "உங்களுக்கு வயது 62 ஆகிறது" என்றான்.

"நீ எப்படிச் சொன்னாய்?" என்று ஆச்சரியம் தாங்காதவராய்க் கேட்டார் ஸைமன். வாஸ்தவமாகவே அவருக்கு 62 வயதுதான். குடியானவன், "என் மகன் ஒரு அரைப்பைத்தியம். அவனுக்கு வயது 31 ஆகிறது. ஆகையால், தாங்கள் கேட்ட கேள்வியிலிருந்து தங்களுக்கு வயது 62 என்று கண்டு பிடிப்பது சுலபமாய்ப் போய் விட்டது" என்றான்!



யுத்தம் ஆரம்பிப்பதற்கு முன்னால், ஒரு பிரஞ்சுப் பத்திரிகை நிருபர் எவ்வளவோ சிரமப்பட்டு, ஜப்பானியச் சக்கரவர்த்தியைப் பேட்டி காண அனுமதி பெற்றார். அந்த நிருபரை சக்கரவர்த்தியின் முன்னிலைக்கு அழைத்துக்கொண்டு போனதும், சக்கரவர்த்தி அவரைப் பார்த்து, "நீங்கள் மஞ்சூரியா போவதாகக் கேள்விப்பட்டேன். ரொம்ப சந்தோஷம்! அங்கே குளிர் அதிகம். கனத்த கம்பளிச் சட்டையாகப் போட்டுக் கொண்டு போங்கள்" என்று கூறினாராம். இத்துடன் பேட்டி முடிந்து விட்டதாக அந்த நிருபருக்கு அறிவிக்கப்பட்டது. மிகவும் ஏமாற்றத்துடன் அந்த நிருபர் வெளியே வந்த போது, ஒரு ஜப்பானிய அதிகாரி ஓட்டமாக ஓடிவந்து, அவரிடம் ரகசியமாக, "ஐயா! ஞாபகம் இருக்கட்டும்! சக்கரவர்த்தி சொன்னதில் ஒரு வார்த்தை கூட வெளியே தெரியக் கூடாது! பத்திரம்!" என்று கூறினாராம்.





ஈ. வே. ரா. காங்கிரஸ்வாதியாகத் தொண்டாற்றி வந்த போது பின்வரும் சம்பவம் நடந்தது. ஒரு அரசியல் மகாநாட்டில் ஒரு முக்கியமான தீர்மானத்தின் மீது வாதப் பிரதிவாதங்கள் எழுந்தன. தலைவர் ராஜாஜி அருகிலிருந்த ஈ. வே. ரா. வைப் பார்த்து அத் தீர்மானத்தை எதிர்த்துப் பேசும்படி கேட்டுக்கொண்டார். ஈ. வே. ரா. வும் எழுந்து, அரைமணி நேரம் அந்தத் தீர்மானத்தைப் பிய்த்துப் பிரியைக் கட்டி வாங்கி விட்டார். தீர்மானமும் தோற்று விட்டது. கூட்டத்தின் முடிவில் ஈ.வே.ரா. ராஜாஜி அருகில் சென்று மெதுவாக, "ஆமாம், ஏன் அந்தத் தீர்மானத்தை எதிர்க்கச் சொன்னீர்கள்?" என்று கேட்டார். அதற்கு ராஜாஜி, "ஏன் எதிர்க்க வேண்டும் என்பதைப் பற்றித்தான் அரைமணி நேரம் நீங்கள் பேசினீர்கள், நான் வேறு சொல்ல வேண்டுமா?" என்றார்.

வன் நீண்ட பெரு மூச்சுடன் வீட்டுக்குள் வந்தான்.

அதற்குப் பிறகு, அவன் பராங்குசத்தை மறக்க முயன்றும் முடியவில்லை. அவன், பத்திரிகையில் எழு வருஷங்களுக்கு முன் — அவனைப் பராங்குசம் வந்து பார்த்த ஒரு மாதத்துக்கெல்லாம் — பராங்குசத்துக்கு விவாகமான செய்தியைப் படித்தான். அன்று அவன் மனதில் ஏனோ வேதனை ஏற்பட்டது!

3

அறையின் ஜன்னல் கதவு திறந்து இருந்தது. நாற்காலியில் உட்கார்ந்திருந்த வத்ஸலா கமலாவையும் எதிரே ஜன்னலருகே இருந்த தோட்டத்தையும் பார்த்துக் கொண்டு உட்கார்ந்திருந்தாள். அந்த நிலவு காய்ந்து கொண்டிருந்த தோட்டத்துக்குத்தான் என்ன அழகு! கமலாவும் ஜன்னல் வழியாய் அந் நிலவு காய்ந்த தோட்டத்தைத்தான் பார்த்துக் கொண்டிருந்தாள். அவள் வத்ஸலாவின் கைகளைப் பிடித்துக் கொண்டு சொன்னாள்:—"எங்கம்மா இருந்தப்போ இந்த மாதிரி நிலவிலே எங்கப்பாவும் நானும் அம்மாவுமாய்த் தோட்டத்திலே உட்கார்ந்து பேசிக் கொண்டிருப்போம். அம்மா நல்ல நல்ல கதையெல்லாம் சொல்வாள்."

வத்ஸலா குனிந்து கமலாவின் நெற்றியில் முத்தமிட்டுக் கொண்டே சொன்னாள் — "உனக்கு இன்னும் கொஞ்சம் உடம்பிலே பலம் வந்ததும் நானும் உன்னை உங்கம்மா மாதிரி தோட்டத்துக்கு அழைத்துப்போய்க் கதை சொல்கிறேன்."

வத்ஸலாவின் மனத்தில் யாரோ சொல்வது போலிருந்தது—"நீ இக்குழந்தைக்குத் தாயாயிருக்க வேண்டியவள்" — இந்தமாதிரி எண்ணம் சென்ற நான்கு நாட்களாக அவள் மனத்தில் அடிக்கடி எழுந்தது. பராங்குசத்தின் வாழ்க்கையில் கமலாவின் தாய் போனதால் சூன்யமாய்க் கிடந்த இடத்தை அவளால் நிரப்ப முடியுமோ என்றுகூட அவள் சில சமயம் யோசித்தாள்.

வத்ஸலாவின் யோசனையைக் கலைத்தது பராங்குசத்தின் காலோசை. வத்ஸலா நாற்காலியிலிருந்து எழுந்து நின்றாள். அவர் கமலத்தின் அருகே வந்து அவளுடைய இரு கன்னங்களையும் தடவிக் கொண்டே வத்ஸலாவிடம் சொன்னார் — "ஏன் நிற்கிறீர்கள்? உட்காருங்கள். நான் இன்றைக்கு வெளியிலே ஊருக்குப் போகிறேன். நாளையுடன் லீவு முடிந்து விடுகிறது. குழந்தை தாயில்லாக் குறையை உங்களைப் பார்த்து மறந்து விட்டாள்."

இதைக் கேட்ட வத்ஸலாவின் கண்களில் நீர் நிறைந்துவிட்டது.

சிறிது நேர மௌனத்திற்குப் பிறகு, "இந்தப் பள்ளியில் கமலாவின் நிலைமையிலுள்ள எத்தனையோ குழந்தைகளுக்குத் தாயாகும் பாக்கியம் பெற்ற உங்களை ஒரு காலத்தில் நான் என் சுயநலத்திற்காகப் பயன்படுத்திக் கொள்ள முயன்றது எவ்வளவு மூடத்தனம்?" என்று பராங்குசம் தன்னைத்தானே கேட்டுக் கொண்டே அவர் குழந்தை கமலாவை நெருங்கி, "போய் வரட்டுமா? வண்டிக்கு நாழியாகிறது, சமத்தா யிரு" என்று குழந்தையிடம் விடை பெற்றுக் கொண்டு வெளியே சென்றார்.

சில நிமிஷம் வரை வத்ஸலா பிரமித்து உட்கார்ந்திருந்தாள். பிறகு குழந்தை கமலாவை மார்போடு அணைத்தாள்.

## நவீன பகாசுரன்

"ஒருவர் எவ்வளவு இட்டிலிகள் சாப்பிட முடியும்?" என்பதைப்பற்றி நாலைந்து நண்பர்கள் ஒரு ஹோட்டலில் உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்தார்கள். "சட்னியும் ஜோரா யிருந்து இட்டிலியும் சூடா யிருந்தால் முப்பது இட்டிலிகள்கூடச் சாப்பிடலாம்" என்றார் ஒருவர். "எங்கே, முப்பது இட்டிலிகள். யாராவது தின்னட்டும்! நான் ஐம்பது ரூபாய் இனாமாகத் தருகிறேன்" என்று பந்தயம் கட்டினார் ஒரு சகிக வேடிக்கைக்காரர். பலர் இப் பந்தயத்தில் கலந்து கொண்டு தோல்வி யடைந்தார்கள். இதை யெல்லாம் பார்த்துக் கொண்டிருந்த ஒரு ஆசாமி அவசரமாக வெளியில் சென்று சிறிது நேரம் கழித்துத் திரும்பி வந்தார். 'இதோ நான் சாப்பிடுகிறேன்' என்று சொல்லி அவர் ஒரே மூச்சில் முப்பது இட்டிலியையும் சாப்பிட்டுக் காண்பித்தார். 'எப்படி அவ்வளவு இட்டிலியையும் சாப்பிட்டீர்கள்?' என்று கேட்டார் பந்தயம் கட்டினவர். 'முதலில் எனக்கே சந்தேகமாய்த்தா னிருந்தது. அடுத்த ஓட்டலுக்குப் போய் முப்பது இட்டிலி சாப்பிட்டுப் பார்த்தேன்; முடிந்தது. உடனே தைரியம் வந்து பந்தயத்தில் கலந்து கொண்டேன்' என்றார் அந்த பகாசுரன்.

ஒரு நாள் திருநெல்வேலிக் காலேஜில் பொருளாதார ஆசிரியரா யிருந்த ஒரு வாலிபன் சென்னைக்கு வத்ஸலாவைப் பார்க்க வந்தான்.

அந்த வாலிபன் முன் வத்ஸலா காப்பியைக் கொண்டு வந்து வைத்தாள். குனியும்போது வாலிபனைப் பார்த்தாள். அவள் அவ்வளவு அழகிய முகத்தை அதற்கு முன் கண்டதே இல்லை. மறு கணம் வெட்கத்துடன் உள்ளே சென்றாள். அவளுடைய தாயாருடைய சிநேகிதி ஒருத்தியின் பிள்ளைதான் அவனும்.

வத்ஸலா உள்ளே போனதும் அவள் தாயாரும் உள்ளே போய்க் கேட்டாள்.—"உனக்குச் சம்மதம்தானே வத்ஸலா?"

"ஆம்" என்று தலை யசைத்தாள் வத்ஸலா.

மறு கணம் கூடத்திலிருந்த வாலிபனுக்கு அருகே வந்து, "பராங்குசம், பெண்ணைப் பிடித்திருக்கோ, இல்லையோ? வத்ஸலா பெயருக்கு எண்பதாயிரம் ரூபாய் எழுதி வைத்திருக்கிறார் அவளுடைய தகப்பனார்" என்றாள் வத்ஸலாவின் தாய்.

"எனக்குச் சம்மதம்தான், மாமி" என்று கூறினான் பராங்குசம்.

"சரி, அப்போ கூடிய சீக்கிரம் முகூர்த்தம் நிச்சயிக்கலாம்" என்றாள் வத்ஸலாவின் தாயார்.

வாலிபன் "ஆகட்டும்" என்று கூறி விட்டுத் தன் சிநேகிதன் வீட்டுக்குச் சென்றான். மறு நாள் காலை மறுபடியும் அவர்களைப் பார்க்க வருவதாய் வாக்களித்திருந்தான்.

மறுநாள் காலையில் வத்ஸலாவும் தாயாரும் பராங்குசத்தை ஆவலுடன் எதிர்பார்த்தார்கள். ஆனால் பராங்குசம் வரவில்லை. இரண்டு நாட்களுக்குப் பின் ஒரு கடிதம் திருநெல்வேலியிலிருந்து வந்தது. அதில் பராங்குசத்தின் தாயார் ஏற்கெனவே வத்ஸலாவுக்கு நிச்சயித்த வரன் இறந்து போன விஷயத்தைக் கேள்விப்பட்டிருந்ததால் இந்த விவாகம் வேண்டாம் என்று சொல்லி விட்டாள் என்ற விஷயத்தை எழுதியிருந்தான்.



**மணி பார்க்கப் போன அவசரத்தில் கோபு ஒரு முட் செடியில் தவறி விழுந்து விட்டான்.**

**தகப்பனார்:—சின்ன முள் எங்கே யிருக்கிறது. பெரிய முள் எங்கே யிருக்கிறது?**

**கோபு:—சின்ன முள் கையில் இருக்கிறது. பெரிய முள் காலில் இருக்கிறது. அப்பா!**

வத்ஸலா துயருற்ற தாய்க்கு ஆறுதல் கூறினாள்.—"அம்மா, ஈசுவரனே என்னைக் கன்னிகையா யிருக்கச் சொல்லி யிருக்கிறார். இனிமேல் எனக்காக நீ மாப்பிள்ளை தேட வேண்டாம். ஒரு குற்றமும் அறியாத என்னை யாரோ செத்ததுக்குப் பொறுப்பாளியாகக் கருதுகிறார்கள். இதைவிட என்ன அநியாயம் வேணும்? படித்த மனிதர் கூட இதை நம்புகிறார் என்றால் புருஷர்களுக்கே மூளை புரண்டு விட்டது என்று தான் தோன்றுகிறது. நான் யாரையுமே கல்யாணம் செய்து கொள்ளப் போகிறதில்லை. நான் மேலே படிக்கத்தான் போகிறேன்" என்றாள்.

வத்ஸலா காலேஜில் சேர்ந்து ஒருமாதமிருக்கும். அவள் மாலையில் வீட்டுக்கு வந்ததும் வீட்டில் தாயாருடன் கூடத்தில் யாரோ பேசிக் கொண்டிருந்தது காதில் விழுந்தது. பராங்குசம்தான் உட்கார்ந்திருந்தான்.

வத்ஸலாவைப் பார்த்த தாய் மகிழ்ச்சியுடன், "வத்ஸலா, பராங்குசம் தன் அம்மாவைச் சமாதானப் படுத்திவிட்டு உன்னைக் கல்யாணம் பண்ணிக் கொள்ள நிச்சயித்து வந்திருக்கிறானாம்."

"அப்படிச் சொல்லிச் சமாதானப் படுத்திவிட்டுக் குற்றம் செய்ய அவர் துணிய வேண்டாம் என்று சொல்லிவிடு, அம்மா! நான் கலியாணமே செய்து கொள்ளப் போவதில்லை. அவர் இவ்வளவு சிரமம் எடுத்துக் கொண்டதற்கு நான் வருத்தப்படுகிறேன்" என்று படபடப்பாகப் பேசிவிட்டு உள்ளே சென்றாள் வத்ஸலா.

அவள் உடம்பெல்லாம் பதறியது. பராங்குசம் சொல்வது காதில் விழுந்தது. "உங்கள் பெண்ணின் சுயமரியாதையையும் கௌரவத்தையும் நான் தெரியாமல் புண்படுத்தி விட்டேன். என்னை மன்னித்துக் கொள்ளுங்கள்! மாமி, நான் போய் வரட்டுமா?"

வத்ஸலா கூடத்தைப் பார்த்தாள். தாயார் வாயடைத்து உட்கார்ந்திருந்தாள். பராங்குசம் குனிந்த தலை நிமிராமல் வெளியே சென்றான். தெருக் கோடி வரை அவன் போவதையே பார்த்துக்கொண்டு நின்று

அவளுக்கு அறிமுகப் படுத்தினாள். வத்ஸலா அவரைப் பார்த்தாள். அந்த க்ஷணம் அவள் அடைந்த ஆச்சரியம் அவளுடைய முகத்தில் பிரதிபலித்தது. "உங்களுக்கு முன்னமேயே பழக்கமுண்டா, இவரை?" என்றாள் டாக்டரம்மாள். அவளிடம், "ஆம்" என்றாள் வத்ஸலா. டாக்டரம்மாள் எழுந்து வெளியே சென்றாள்.

தலை குனிந்து உட்கார்ந்திருந்த வத்ஸலாவின் காதுகளில், "தாயில்லாக் குழந்தை உங்களிடம் தன் தாயைக் கண்டு விட்டாள். ஆம், இனிமேல் அவளிடம் அன்பு காட்டுகிறவர்களையெல்லாம் அவள் தாயாக எண்ணத்தானே வேண்டும்?" என்று அவர் தழுதழுத்த குரலில் சொல்வது விழுந்தது. அவள் நிமிர்ந்து பார்த்தாள். அவர் கண்களிலிருந்து கண்ணீர் தாரை தாரையாகப் பெருகிக் கன்னங்களில் வழிந்து கொண்டிருந்தது.

வத்ஸலாவுக்கு அவர் கமலாவின் தகப்பனாராக அன்றுதான் முதன் முதலாக அறிமுகமானார் என்றாலும் அவள் வெகு நாட்களுக்கு முன்னமேயே அவரைப் பார்த்திருக்கிறாள். ஏழு வருஷங்களுக்கு முன்னால் நடந்தவைகளை நினைப்பூட்டியது அந்தச் சந்திப்பு.

## 2

**வ**த்ஸலா எஸ். எஸ். எல். ஸி. தேறியிருந்தாள். அவளுடைய ஒரே அண்ணன் ரங்கராஜன் வடக்கே டாடா நகரில் என்ஜினியராயிருந்தான். வக்கீலாக இருந்து நிறையப் பணம் சம்பாதித்து வைத்துவிட்டுத்தான் வத்ஸலாவின் தகப்பனார் மறு உலகம் புகுந்தார். பதினாறு வயதுப் பெண்ணுக்குக் கணவனைத் தேடும் பொறுப்பு தாயின் தலையில் விழுந்தது. எத்தனையோ படித்த வாலிபர்கள் வத்ஸலாவைப் பேட்டி கண்டார்கள்.

அவளுடைய அண்ணனுடன் படித்த, பல நண்பர்கள் அவளைப் பார்க்க வந்தார்கள்.

ஒருநாள் ஒரு வாலிபர் அவளைப் பார்க்க வந்தார். ரங்கராஜனுடன் சென்னையில் படித்தவராம். அவரைப் பார்த்ததுமே வத்ஸலாவின் மனத்துக்குப் பிடித்துவிட்டது. அவர் ஏதோ நல்ல வேலையிலும் இருந்தார். அவரை மணந்து கொள்ள வத்ஸலா இசைந்தாள். தை மாதத்தில் விவாகம் என்று நிச்சயிக்கப்பட்டது. ஆனால் மார்கழி மாதத்திலேயே அந்த வாலிபர் மார்பில் கிரிக்கட் பந்து அடிபட்டுக் காலம் சென்றதாக அவள் தாய்க்குத் தகவல் எட்டியது. இதனால் வத்ஸலாவின் தாயாருக்கு ஏற்பட்ட வருத்தம் கொஞ்சமல்ல. "தேடித் தேடி ஒருவன் அகப்பட்டான். அவனும் போய் விட்டான். இனிமேல் யாரிட்டாவது உனக்கு வரன் தேடச் சொன்னால் அவர்களும் பயப்படுவார்கள். அவன் சாக வேண்டிய காலம் என்று எண்ண மாட்டார்கள். உன் அதிர்ஷ்டம் என்று எண்ணுவார்கள்" என்றாள் தாய்.



# இழந்த இன்பம்

எஸ். கிருஷ்ணன்



சுவரில் கடிகாரம் பத்துமுறை அடித்து விட்டு மௌனமாயிற்று. வெளியே வானம் பொத்துக் கொண்டாற்போல் மழை கொட்டிக் கொண்டிருந்தது. இடி அந்த ஆஸ்பத்திரி அதிரும்படியாக இடித்துக் கொண்டிருந்தது. சுரவேகத்தில் மயங்கிக் கிடந்த குழந்தை கமலா இடியோசையால் பயமுற்றுக் கண்களைத் திறந்து, "அப்பா வந்து விட்டாரா?" என்று கேட்டாள். "இதோ வந்து விடுவார், அம்மா!" என்றாள் வத்ஸலா.

வத்ஸலா கமலாவைப் பார்த்து இரண்டு நாள் கூட ஆகவில்லை! முன் தினம்தான் வத்ஸலா வாணி மந்திரத்தில் உதவி வார்டனாக நியமிக்கப்பட்டாள். அந்தப் பள்ளியில் படித்து ஹாஸ்டலிலேயே வாழ்ந்து வந்த நூறு பெண்களில் ஒருத்திதான் கமலா. அந்தக் குழந்தைக்குத் தாயார் இல்லை என்பதை முதல் நாளே அவளிடம் கேட்டு அறிந்து கொண்டிருந்தாள் வத்ஸலா.

வத்ஸலா வேலைக்கு வந்த இரவே கமலாவுக்குச் சுரம் கண்டது. வாணி மந்திரத்தைச் சேர்ந்த ஆஸ்பத்திரியின் டாக்டரம்மாள் கவலையுடன், "ரொம்ப சீரியஸ். கொஞ்சம் முன்னாலேதான் தலைமை ஆசிரியை கமலாவின் தகப்பனாருக்குத் தந்தி கொடுத்திருக்கிறார்" என்றதும் வத்ஸலாவுக்கு ஏற்பட்ட வருத்தம் சொல்லத்தரமன்று.

அன்றிரவு ஒவ்வொரு கணமும் "என் குழந்தையைக் காப்பாற்று" என்று பகவானை வேண்டிக் கொண்டிருந்தாள் வத்ஸலா.

பகவான் அவள் பிரார்த்தனைக்குச் செவி சாய்த்ததே போல் அடுத்த நாள் காலை குழந்தைக்குச் சுரம் குறைந்தது.

குழந்தையைப் பரிசோதனை செய்த டாக்டரம்மாள், "இனிமேல் குழந்தைக்குப் பயமில்லை. நீங்கள் ஹாஸ்டலுக்குப் போய் விட்டு வரலாம். அதுவரை நான் கவனித்துக் கொள்கிறேன்" என்றாள்.

வத்ஸலா ஹாஸ்டலுக்குப் போய் வேலையைக் கவனித்து ஸ்நானம் சாப்பாடெல்லாம் முடித்துக் கொண்டு பதினொரு மணிக்குக் கமலாவினிடம் வந்தாள். கமலாவின் அறையில் டாக்டரம்மாள் வேறு யாரோ ஒருவருடன் பேசிக் கொண்டிருந்தாள். வத்ஸலாவின் குரலோசை கேட்டுத் திரும்பிப் பார்த்த டாக்டரம்மாள் தன் எதிரே யிருந்தவரிடம் "இதோ வந்து விட்டாள் மிஸ் வத்ஸலா! உங்கள் குழந்தைக்கு இராத் தூக்கமில்லாமல் சிசுருஷை செய்தவள் இவள்தான்" என்றாள். வத்ஸலா அருகே போனதும் அவளிடம், "இவர்தான் கமலாவின் தகப்பனார்" என்று



# ரகசியம்



வது கரன்ஸிகோட்டு இருக்குமோ என்ற சந்தேகத்தில் அவன் ஒருநாள் கோட்டைச் சோதனை செய்து பார்த்தான். அப்படியும் இருப்பதாய்த் தெரியவில்லை.

ஒருநாள் செல்லம் அதை எப்படியோ எடுத்து ஜாடிக்காரனிடம் போட்டு விட்டாள். ஆனால், ராமமூர்த்தி ஏற்கெனவே அந்த ஜாடிக்காரனிடம் இது விஷயமாகத் தெரிவித்திருந்தபடியால், அந்தக் கோட்டு திரும்பவும் அவன் கைக்கு வந்து விட்டது.

"நான் இனிமேல் உங்களுடன் பேசவே மாட்டேன்" என்றாள் அதைப் பார்த்த செல்லம்.

இருவரும் பேசிக்கொள்வதை நிறுத்தி நாலு நாளாயிற்று. "சமையலாகி விட்டது; சாப்பிட வரலாம்!" என்பதற்கு அடையாளமாகச் செல்லம் கரண்டியால் சிப்பில் தட்டை நாலு தட்டுத் தட்டுவாள். "ஆபிசுக்குப் போகிறேன். கதவைச் சாத்திக் கொள்!" என்பதற்கடையாளமாக ராமமூர்த்தி கதவைப், 'படார்,' படார்' என்று சாத்தி விட்டுப் போவான்.

தம்பதிகளுக்குள் ரொம்பவும் கசப்பு வளர்ந்துவிட்டது. செல்லம் தன் மாமியாரிடம், "இனிமேல் இந்த வீட்டில் என்னால் இருக்கமுடியாது, அம்மா! அவர் அந்தக் கோட்டை விட்டுவிட்டு வேறு நல்ல கோட்டுப் போட்டுக் கொண்டதும் எனக்குத் தந்தி அடியுங்கள்" என்று சொல்லி விட்டுச் செல்லம் ஊருக்குப் புறப்பட்டாள்.

ராமமூர்த்தி நிலைமை நெருக்கடியாகி விட்டதைப் பார்த்து, செல்லத்தைத் தனியாகக் கூப்பிட்டான். "அட, அசடே! உன்னிடம் இத்தனை நாளாய் இந்த ரகசியத்தைச் சொல்ல வேண்டாம் என்றிருந்தேன். இது உன் அப்பா முதன் முதல் தைத்துக் கொடுத்த கம்பளிக் கோட்டு. அதனால்தான் இவ்வளவு கிழிந்துபோயும் இது எனக்குப் புத்தப் புதியப் பட்டுச் சட்டை மாதிரி இருக்கிறது. இதைப் போட்டுக் கொண்டாலே எனக்கு என்னவோ ஆனந்தமாயிருக்கிறது. இந்த ரகசியத்தை முதலிலேயே சொன்னால், அதை வழக்கம்போல் அம்மாவிடம் உளறி வைத்து விடுவாய் என்றுதான் சொல்லவில்லை! நான் மாமனார் வீட்டுச் சட்டையைக்கூடப் பிரமாதமாகக் கொண்டாடுகிறேன் என்று அவள் நினைத்துக்கொள்வாளோ, இல்லையோ?.......சரி, உனக்கு இஷ்டமில்லையானால் இதை ஜாடிக்காரனிடமே போட்டு விடு!" என்று சொல்லிக் கோட்டைக் கழற்றினான் ராமமூர்த்தி.

"இந்த ரகசியத்தை என்னிடம் சொல்லாமல் இருந்தீர்களே, அது மாதிரி இந்தக் கோட்டிலுள்ள கிழிசலையும் கொஞ்சம் ரகசியமாக வைத்துக் கொள்ள வேண்டாமா?" என்று சொல்லி அந்தக் கோட்டை ஆனந்தத்துடன் அணைத்து எடுத்துப் பெட்டியில் வைத்துப் பூட்டினாள் செல்லம்.

நாலு நாளைக்கெல்லாம் மாமனார் வீட்டிலிருந்து அரை டஜன் புதிய கோட்டு ராமமூர்த்திக்கு வந்தது. அவற்றைத் தொட்டுப் பார்த்த ராமமூர்த்திக்கு உண்மையில் உடம்பெல்லாம் மின்சாரம் பரவுவதுபோல் ஆனந்தம் பரவிற்று!

—வி. எஸ். ஆர்.



கம்பெனியின் பெயர் கெட்டு விடாதா?" என்று சொல்ல, கம்பெனிக்காரர், "எங்கள் பெயர் கெடாதபடி பார்த்துக்கொள்கிறேன் கவலைப்பட வேண்டாம்" என்று சொல்லி, கடிகாரத்திலுள்ள பெயரை அழித்துக் கம்பெனியின் பெயரைக் காப்பாற்றினார்!



# சொல்லாத

"எவ்வளவு தடவை உங்களைக் கெஞ்சிக் கேட்டுக் கொள்கிறது? உங்கள் காதுதான் செவிடா? உங்கள் கல் மனசுதான் இளகாதா?" என்று கெஞ்சினாள் செல்லம்.

அந்தச் சமயத்தில் ராமமூர்த்தியின் மனம் கனிந்து உருகி விட்டதுபோல் அவன் முகத்தில் மாறுதல் உண்டாயிற்று. மறுகணம், அவன் கை அவன் போட்டுக் கொண்டிருந்த கோட்டை மெதுவாய்த் தடவிப் பார்த்ததோ இல்லையோ, லேசான மின்சார 'ஷாக்' பட்டு விட்டவன் போல் அவன் நிமிர்ந்து நின்று கொண்டான். அவன் முகம் கடுமையாக மாறிற்று.



"மாட்டேன்! நீ சொல்வதைக் கேட்க மாட்டேன்" என்றான் அவன் அழுத்தமாக.

"மாட்டீர்களா? அந்தக் கோட்டைக் கழற்றி உள்ளே வைத்து விட்டு வேறு கோட்டைப் போட்டுக் கொள்ள மாட்டீர்களா? அது நாலு இடத்தில் கிழிந்து போய் விட்டது; எட்டு இடத்தில் ஒட்டுப் போட்டிருக்கிறதே?"

"இன்னும் கிழியவும் ஒட்டுப் போடவும் விஸ்தாரமான இடமிருக்கிறது. கவலைப்பட வேண்டாம்!"

"இப்படிச் சாயம் வெளுத்துப் போய் ஒரு இடத்தில் வெள்ளை, ஒரு இடத்தில் காவி, இன்னொரு இடத்தில் நீலமாயிருக்கிறதே. இது உங்களுக்குப் பிடித்திருக்கிறதா?"

"தனித்தனியாக ஒவ்வொரு வர்ணத்தில் கோட்டு தைத்துக் கொள்வதைவிட, ஒரே கோட்டில் இவ்வளவு வர்ணங்கள் இருப்பது லாபம்தானே?"

"ஊரில் எல்லோரும் உங்கள் கோட்டைப் பற்றியே பேசுகிறார்களே, அதை நீங்கள் கவனிக்கவில்லையா?"

"அதற்கென்ன? சர்ச்சில் சுருட்டைப் பற்றிப் பேசுகிறார்கள்; ஹிட்லர் மீசையைப் பற்றிப் பேசுகிறார்கள்; ராமமூர்த்தி கோட்டைப் பற்றியும் பேசி விட்டுப் போகட்டுமே!"

"நான் சொல்வதைக் கேட்கப் போகிறீர்களா, இல்லையா? இந்தக் கோட்டைக் கழற்றித் தூர எறியப் போகிறீர்களா, இல்லையா?" என்றாள் செல்லம் பொறுமை யிழந்து. "மாட்டேன், உயிர் போவதாக இருந்தாலும் மாட்டேன்!" என்று கத்தினான் ராமமூர்த்தி.

ராமமூர்த்திக்கும் அவன் மனைவி செல்லத்துக்கும் பிரதி தினமும் இந்த மாதிரி ரகளை நடக்துகொண்டிருந்தது. "ஒரு சின்ன கோட்டு விஷயத்திற்கு இவ்வளவு பிடிவாதம் பிடிக்கிறாரே, நாளைக்கு ஒரு காரியா காரியத்தில் எவ்வளவு பிடிவாதமாயிருப்பார்!" என்பதை எண்ணச் செல்லத்துக்கு மகா ஆத்திரமாயிருந்தது. தூங்கும்போதுகூட அதைத் தலைமாட்டில் வைத்துக் கொள்ளும்படியான மர்மம் என்ன இருக்கும் என்பது அவளுக்குத் தெரியவில்லை. தலையணையில் சிலர் புதையலை ஒளித்து வைத்திருப்பதுபோல், அந்தக் கோட்டுக்குள் ஏதா




மணி & கம்பெனி தெருக் கடிகாரம் எப்பொழுதுமே ஓடாமல் இருப்பதைப்பார்த்து ஆத்திரம் அடைந்த ஒரு முனிஸிபல் அதிகாரி, கடிகாரக் கம்பெனிக் காரரை, 'விடுவிடு' என்று இழுத்து வந்து "கடிகாரம் அடிக்கடி ரிப்பேராகி ஓடாமல் இருக்கிறதே. உங்கள்

பள்ளிக்கூட உபாத்தியாயர்கள் (சகவரா! திரும்பவும் அந்தப் பள்ளிக்கூட உபாத்தியாயர்களின் தலையைத்தான் உருட்ட வேண்டி யிருக்கிறது!) இத்தகைய நெருக்கடியை முன் கூட்டி யோசித்தோ என்னமோ, தங்கள் கீழ் வாசித்த எல்லா மாணவர்களுக்கும் ஒரு விதப் பயிற்சி அளித்திருக்கிறார்கள்.

"கோடிட்ட இடங்களைப் பூர்த்தி செய்க" என்று உபாத்தியாயர்கள் மாணவர்களுக்கு ஒரு வித அப்பியாசம் கொடுக்கிறார்களே, அதைத்தான் குறிப்பிடுகிறேன். உபாத்தியாயர்கள் என்ன செய்கிறார்கள்? ஏதாவது ஒரு வாசகத்தை எடுத்துக் கொள்கிறார்கள். அங்கங்கே நடுவில், நடுவில், நாலு வார்த்தைகளை அடித்து, அதற்குப் பதில் கோடு போடுகிறார்கள்.

இந்த வழியைத்தான் நான் உங்களையும் பின்பற்றும்படி கேட்டுக் கொள்கிறேன். இட நெருக்கடியை உத்தேசித்து, கோடுகளுக்குப் பதில் வார்த்தைக்கு ஒரு புள்ளி விதம் போட்டுக் கொண்டால் போகிறது. தற்காலத்தில் பத்திரிகை படிக்கும் எல்லாரும் கிட்டத்தட்ட இத்தகைய பயிற்சி செய்து பழக்கமுள்ளவர்களாதலால் விஷயத்தைப் புரிந்துகொள்ளத் திண்டாட மாட்டார்கள்.

அப்படித்தான் திண்டாடினார்கள் திண்டாடட்டுமே! இந்த யுத்த காலத்தில் ஏதோ புரிந்த மட்டும் லாபம் என்று பத்திரிகைகளை வாசிக்கட்டுமே!

ஆனால் இந்த யோசனையெல்லாம் சாதாரணப் பத்திரிகைக்காரர்களுக்குத்தான். போட்டிப் பந்தயப் பத்திரிகைக்காரர்களுக்கு அல்ல.

போட்டிப் பந்தயங்கள் போட்டுப் பாதிப் பத்திரிகையை நிரப்பும் ஆசிரியர்கள் பத்திரிகையை எப்படிக் குறைப்பது என்று கவலைப்படத் தேவையில்லை. போட்டிப் பந்தயப் பக்கங்களை வைத்துக் கொண்டு, அவற்றுக்குப் பின்னணி அலங்காரமாகப் போடப்படும் கதை முதலிய விஷயங்களை நீக்கி விட்டால் போகிறது.

எதற்கும் பத்திராசிரியர்களைக் கவலைப்படவேண்டாம் என்று கேட்டுக் கொள்கிறேன். காகிதத்தைத்தான் மூன்றில் ஒரு பங்காகக் குறைத்துக் கொள்ளும்படி சர்க்கார் கேட்டுக் கொண்டிருக்கிறார்களே யொழிய, நம் மூளையையும் மூன்றில் ஒரு பங்குதான் உபயோகிக்க வேண்டும் என்று இன்னும் கட்டுப்பாடு செய்யவில்லை!



மாட்டார்கள். மனிதர்கள் செய்யும் ஒவ்வொரு காரியத்துக்கும், பக்கத்திலேயே சமாதானம் கண்டு பிடிக்கும் வழக்கம் எங்களுக்குக் கிடையாது. மனிதன் பெரியவனான பிறகு செய்யும் ஒவ்வொரு காரியத்துக்கும், அவன் சிறு வயதிலேயே மனத்தில் ஆழமாகப் பதிந்துவிட்ட சில உணர்ச்சிகள் தான் காரணம் என்பது எங்களுக்குத் தெரியும்.

இதே ரீதியில் இந்த சர்க்கார் உத்தியோகஸ்தர்கள் இப் புது உத்தரவு போட்டதற்கு அவர்களின் சிறு வயதில் அவர்கள் மனதில் ஆழமாகப் பதிந்துவிட்ட உணர்ச்சிகள் என்ன என்று யோசித்துப் பார்த்தேன். ஒரே நிமிஷத்தில் விஷயம் விளங்கி விட்டது !

பத்திரிகாசிரியர்கள் எல்லாம் இன்று தலையைச் சொறிந்து கொள்வதற்கும், தலை மயிரைப் பிய்த்துக் கொள்வதற்கும் ஆதி காரணம் யார் தெரியுமா? எல்லாம் அந்தப் பாழும் பள்ளிக்கூட உபாத்தியாயர்கள் தான் !

முதல் பாரத்திலிருந்து ஆரம்பித்து பி. ஏ. வகுப்பு முடியும் வரை, "கீழே கொடுக்கப்பட்டுள்ள வாசகத்தை மூன்றில் ஒரு பங்காகச் சுருக்குங்கள்" என்று ஒவ்வொரு பரீட்சையிலும் உபாத்தியாயர்கள் கேட்டுக் கேட்டு மனத்தில் ஆழமாகப் பதிந்து விட்ட உணர்ச்சி காரணமாகத்தான் இன்று சர்க்கார் அதிகாரிகள் பத்திரிகைக் காரர்களைப் பக்கங்களை மூன்றில் ஒரு பங்காகக் குறைக்கும்படி கேட்டிருக்கிறார்கள் என்பதில் சந்தேகமில்லை.

ஆகவே இந்தப் புதுச் சட்டத்தைப் பற்றிக் கவலைப்படத் தேவையில்லை. முள்ளை முள்ளால் எடுக்கலாம். பள்ளிக்கூட உபாத்தியாயர்களால் ஏற்பட்ட இந்த விபத்தைப் பள்ளிக்கூட உபாத்தியாயர்களாலேயே தடுக்கலாம்.

ஒவ்வொரு பத்திரிகைக் காரியாலயத்திலும் ஒரு பள்ளிக்கூட உபாத்தியாயரை வேலைக்கு அமர்த்தி விட்டால் அவர்கள் எந்த விஷயம் வந்தாலும் மூன்றில் ஒரு பங்காகச் சுருக்கி விடுவார்கள்.

இல்லை, பள்ளிக்கூட உபாத்தியாயர்கள் வேலைக்கு வரவில்லை, நாமே இந்தக் காரியத்தைச் செய்யலாம். எப்படிச் செய்வது என்று இதோ சொல்கிறேன். ஆனால் ஒரு எச்சரிக்கை! விஷயம் புரிந்து கொள்வதற்குச் சற்று கடினமாகத்தான் இருக்கும். வேண்டுமென்றே எளிதில் புரியாதபடிதான் எழுதியிருக்கிறேன். ஏனெனில் எவ்வளவுக் கெவ்வளவு புரியாதபடி எழுதுகிறோமோ அவ்வளவுக் கவ்வளவு விஷயம் பெரிது என்று ஜனங்கள் கொள்கிறார்கள்.

ஒவ்வொரு வாக்கியத்திலும் எழுவாய், பயனிலை, செயப்படு பொருள் என்று மூன்று அம்சங்கள் இருக்கின்றன அல்லவா !

(என்ன முழிக்கிறீர்கள் ? சிறு வயதில் ரீட்டுருப் பண்ணி ஒப்புவித்த இலக்கணப் பாடமெல்லாம் மறந்து விட்டீர்களா ?)

ஒவ்வொரு வாக்கியத்துக்கும் மூன்றும் இருக்கவேண்டும் என்று எந்த சாஸ்திரத்தில் சொல்லி யிருக்கிறது ? ஏதாவது ஒன்று இருந்தால் போதாதா, கேட்கிறேன் ?

ராமன் கிருஷ்ணனை அடித்தான் என்று ஒரு வாக்கியம் வருகிறது என்று வைத்துக் கொள்ளுங்கள். பேசாமல் ராமனை மாத்திரம் வைத்துக் கொண்டு, கடைசி இரண்டு வார்த்தைகளையும் அடித்து விடுங்கள். இப்படி ஒவ்வொரு வாக்கியத்திலும் எழுவாய், பயனிலை, செயப்படு பொருள், இம் மூன்றிலும் ஏதாவது ஒன்றை வைத்துக் கொண்டு, மற்ற இரண்டையும் அடித்துக் கொண்டு வந்தால் தன்னைப்போல் விஷயம் மூன்றில் ஒரு பங்காகச் சுருங்கி விடுகிறது.

இதற்குச் சிலர் ஒரு ஆட்சேபம் கூறலாம். இப்படிச் செய்தால் நேயர்களுக்கு விஷயம் புரிய வேண்டாமா என்று கேட்கலாம், ரொம்ப சரி. இந்த ஆட்சேபத்துக்கு இதோ என் சமாதானம்.

பழைய காலத்து ஜனங்களுக்குப் புரியாதுதான். ஆனால் தற்காலத்து ஜனங்களுக்கு அப்படியல்ல. தந்தியைப் படித்துப் புரிந்து கொள்ளும் ஜனங்கள் கட்டாயம் இத்தகைய விஷயங்களையும் புரிந்து கொள்ளுவார்கள்.

அதோடுகூட தற்கால ஜனங்களுக்கு இன்னொரு அனுகூலம் இருக்கிறது,

# அரைப்பணத்திலே கல்யாணம்!

நாடோடி

இந்தப் பத்திரிகாசிரியர்களைக் கண்டால் எனக்கு மிகவும் பரிதாபமாக இருக்கிறது. பாவம், இவர்கள் எப்பொழுது பார்த்தாலும் தலையைச் சொறிந்து கொண்டிருக்கிறார்கள். காகிதம் எதேஷ்டமாகக் கிடைத்து, ஒவ்வொரு இதழுக்கும் நூறு பக்கமும், இருநூறு பக்கமும் போட்டுக் கொண்டிருந்த காலத்தில், பத்திரிகையை எப்படி நிரப்புவது என்று தெரியாமல் தலையைச் சொறிந்தார்கள். இப்பொழுது தினம் ஒரு காகிதக் கட்டுப்பாடு விதி வந்து கழுத்தைப் பிடித்துக் கொண்டிருக்கிற காலையில் இத்தனை விஷயங்களையும் இந்த ஒன்றே முக்காலே வரைக்கால் பக்கத்துக்குள் எப்படிப் போடுவது என்று தலையைச் சொறிகிறார்கள். பாவம் இம்மாதிரி தலையைச் சொறிந்து, சொறிந்து, அநேகம் ஆசிரியர்களுக்குத் தலை வழுக்கை விழுந்து விட்டதை நான் பார்க்கிறேன்.

இந்த ஆசிரியர்களை இப்படி 'மொட்டை யடித்தது' போதாது என்பது போலவோ, என்னவோ சமீபத்தில் இன்னும் ஒரு காகிதக் கட்டுப்பாடு உத்தரவு வந்திருக்கிறது. இந்த உத்தரவைக் கண்டு மீதி இருக்கும் ஒன்றிரண்டு ரோமங்களையும் பிய்த்து விட்டுக் கொண்டு தங்களை ஒரே வழுக்கை மண்டையாகச் செய்து கொண்டு விட்டார்கள் ஆசிரியர்கள்.

இந்தப் பத்திரிகாசிரியர்களைக் கண்டால் பரிதாபமாக இருக்கிறது. அப்படி இவர்கள் கண்டு நடுங்கும்படி இந்தப் புது உத்தரவில் ஒன்றுமே இல்லை. முன் எத்தனை பக்கம் போட்டார்களோ, அதைப் போல் முப்பது சதவிகிதம், அதாவது மூன்றில் ஒரு பங்கு தான் இனிமேல் போடலாம் என்று உத்தரவு வந்திருக்கிறது.



மூன்றில் ஒரு பங்காகப் பத்திரிகையைக் குறைப்பது மிகவும் கஷ்டம் என்றும், இதனால் தங்கள் பத்திரிகைக்கு விசேஷமாக உள்ள அநேக நல்ல அம்சங்களை நிறுத்த வேண்டி வரும் என்றும் பத்திரிகாசிரியர்கள் குறைப்படுகிறார்கள்.

எதற்காக நல்ல அம்சங்களை நிறுத்த வேண்டுமோ, தெரியவில்லை. "அரைப் பணத்திலே கல்யாணம், அதிலே கொஞ்சம் வாணவேடிக்கை" என்ற பொன்மொழி பிறந்த இந்த நாட்டில், அரைப் பக்கப் பத்திரிகையிலேயே ஆயிரம் நல்ல அம்சங்களைக் கொடுக்கத் தெரிய வேண்டாமா!

மூன்று வேளைச் சாப்பாட்டை மூன்றே மாத்திரையாக மாற்றிக் கொடுக்கும் இந்த விஞ்ஞான நாளிலே முப்பது நல்ல விஷயங்களை மூன்றே பக்கங்களில் அடக்கத் தெரிய வேண்டாமா?

"எல்லாம் பிறருக்கு உபதேசம் பண்ணுவது எளிது, நீங்களே செய்து காண்பியுங்களேன்" என்கிறார் எங்கள் ஆசிரியர். அப்படிச் செய்து காண்பிக்கும்படி நான் சொந்தப் பத்திரிகை எதுவும் இன்னும் ஆரம்பித்து வைக்கவில்லை. "மாதம் ஒரு புத்தகம்" கூட இன்னும் போட ஆரம்பிக்க வில்லை. ஆகவே பிறருக்கு உபதேசம் பண்ணும் நிலையில் தான் இன்னும் இருக்கிறேன்.

முப்பதில் ஒரு பங்காகச் சுருக்கு என்றோ, நாற்பதில் ஒரு பங்காகச் சுருக்கு என்றோ சொல்லாமல் மூன்றில் ஒரு பங்கு சுருக்கு என்று இந்தச் சர்க்கார் அதிகாரிகள் எப்படிச் சொன்னார்கள் என்று அநேகர் ஆச்சரியப்படுகிறார்கள்.

காகித உற்பத்தி மூன்றில் ஒரு பங்காகக் குறைந்துவிட்டது. அதனால் தான் மூன்றில் ஒரு பங்காகக் குறையுங்கள் என்று உத்தரவு போட்டதாக அநேகர் சொல்லுகிறார்கள், சர்க்காரும் சொல்லுகிறார்கள்.

ஆனால் என்னைப் போல் மனோ தத்துவ ஆராய்ச்சி நிபுணர்கள் இத்தகைய சமாதானங்களை, நொண்டிச் சாக்குகளை, ஒப்புக்கொள்ள

யிருந்து உத்தரவு பெற்றுக்கொண்டு, அந்த க்ஷணமே ஆஸ்பத்திரியை விட்டு வெளியேறினான்.

“தங்கம்! நீ எப்படி இங்கே வந்தே?” என்று கேட்டான் சந்தபாலன்.

“நிஜமாவே உனக்கு ஒரு சங்கதியும் தெரியாதா? என்னைக் கல்யாணம் பண்ணிக் கொள்ள இருந்த கோபாலக் கோனான் மவன் செத்துப்பூட்டான். அவன் என்னாலேதான் செத்துப் பூட்டான்னு ஊரிலே எல்லாம் ஒரே பேச்சு. அதாலே வேறே ஒருத்தரும் என்னைக் கல்யாணம் பண்ணிக்க வரலே. இந்த சமயத்திலே அந்தக் கோபாலக் கோனான் எப்படியாச்சும் நம்மக் கடன் வந்தாப் போதும்னு கோர்ட்டிலே வழக்கைப் போட்டு, எங்க அப்பாவுக்கு இருந்த நிலபுலம், ஆடுமாடு எல்லாத்தையும் ஜப்தி செஞ்சுப்பிட்டான். இந்தக் கஷ்டமெல்லாம் தாளாம எங்க அப்பாவும் செத்துப் பூட்டாரு. இப்போ எங்க அம்மாவும் நானும் அந்த ஊரிலே இருந்தா ஒண்ணும் சரிப்பட்டு வராதுன்னு, இந்த ஊருக்கு வந்து கூலி வேலை செஞ்சிப் பிழைச்சுக் கிட்டு வரோம்” என்று சொல்லி சோகமே உருவாய் நின்றாள் தங்கம்.

“அப்படியா சங்கதி? அத்தனை கஷ்டத்திலும் என் பாட்டை மட்டும் மறக்கலியே!”

“எப்படி மறப்பேன்?”

3

இப்படிப் பேசிக்கொண்டே தங்கம் அவனைத் தன் வீட்டை நோக்கி அழைத்துச் சென்றாள். வழியில் சந்தபாலனின் கதையைக் கேட்ட தங்கம், தாங்கமுடியாத தணலைக் கண்ட தங்கம்போல் உருகினாள்.

வீட்டுக்குள் நுழைந்ததும் சந்தபாலனைக் கண்ட தங்கத்தின் தாய் தன்னை மறந்து நின்றாள். தங்கம் மூச்சுவிடாமல் அவனுடைய கதையைத் தன் தாயிடம் சொன்னாள். அதைக் கேட்ட அவள், “அப்பாடா! எப்படியோ என் வீட்டைத் தேடி வந்துட்டே! இனிமே என் கஷ்டம் தொலைஞ்சுது!” என்றாள்.

“என்ன கஷ்டம் தொலைஞ்சுது?” என்று கேட்டாள் தங்கம்.

“எல்லாம் உன் கல்யாணக் கஷ்டந் தான்!” என்றாள் அவள்.

அப்பொழுது சந்தபாலனைப் பார்த்த தங்கத்தின் கண்கள், “உஷார்! இங்கே என் அம்மா இருக்கிறாள்!” என்று எச்சரித்தன.

ஆனால், நந்தபாலன் அவளுக்குச் சளைக்காமல், "தங்கம்! நான் என்னுத்துக்கு அந்தக் குன்றிலிருந்து குதிக்க அப்படி முழிச்சேன், தெரியுமா? எல்லாம் உன் கையைப் பிடிக்கணுமே என்கிற ஆசையாலேதான்!" என்று சொல்லிச் சமாளித்துக் கொள்ளப் பார்ப்பான்.

## 2

இடையில் நந்தபாலனுடைய ஆசையில் அவனுடைய மாமன் ஒரு நாள் மண்ணைப் போட்டுவிட்டான். அன்று ஒரு ஆட்டுக் குட்டி நரிக்கு இரையாகி விட்டது. அதைப் பற்றி நந்தபாலனை அவனுடைய மாமன் திட்டிக் கொண்டிருந்தபோது, அதே ஊரைச் சேர்ந்த கோபாலக் கோனான் என்பவன், "அவன் அங்கே வந்து மாட்டையா மேய்க்கிறான்? உன் மகளை யல்லே மேய்ச்சுக்கிட்டு இருக்கான்?" என்று கோள் சொல்லிவிட்டான். இதைக் கேட்டதும் கோவிந்தக் கோனானுக்கு ஆத்திரம் அளவுக்கு மீறி வந்துவிட்டது. ஏனெனில், அவன் கோபாலக் கோனானிடம் வேண்டிய மட்டும் கடன் வாங்கி யிருந்தான். அந்தக் கடனை ஈடு செய்வதற்காக, அவன் தன்னுடைய பெண்ணைக் கோபாலக் கோனானின் பிள்ளைக்குக் கல்யாணம் செய்து கொடுக்க எண்ணி யிருந்தான்.

ஆகவே, "இனிமேல் நீ என் வீட்டுப் பக்கம் தலையைக் காட்டினா, காலை வெட்டிப் பூடுவேன்!" என்று சொல்லி, கோவிந்தக் கோனான் நந்தபாலனை விரட்டி விட்டான்.

நந்தபாலனின் நிலைமையைக் கண்டு, தாரை தாரையாகக் கண்ணீர் வடிப்பதைத் தவிர, தங்கத்தால் வேறு ஒன்றும் அப்பொழுது செய்ய முடியவில்லை.

தனக்கு ஆறுதல் அளிக்கத் தலைவிதியைத் தவிர வேறு ஒன்றையும் காணாத நந்தபாலன், அப்பொழுது அந்த ஊருக்கு வந்திருந்த கழைக் கூத்தாடிகளின் கோஷ்டியில் சேர்ந்து விட்டான். ஏன், தங்கத்தை மறக்க அது தான் சிறந்த வழி என்றும் அவன் அப்பொழுது நினைத்தான். ஆனால் எப்பொழுதுமே அவன் நெஞ்சம் மட்டும் தங்கத்தை மறக்க மறுத்து விட்டது.

* * *

இந்தக் கடைசி கட்டத்துக்கு வந்ததும் நந்தபாலன், ஒரு நீண்ட பெருமூச்சு விட்டுத் தன்னுடைய மனோரதத்தை மிக்க பிரயாசையுடன் நிறுத்தினான். அப்பொழுது அந்த ஆஸ்பத்திரியின் தோட்டத்துக்கு வெளியே,

தங்கத்தாலே காப்புப் போட்டுத்
தங்கமே தங்கம்!

என்று யாரோ பாடிக்கொண்டு செல்லும் சத்தம் கேட்டது. குரலோசையிலிருந்து அந்தப் பாட்டைப் பாடுவது தங்கமாய்த் தான் இருக்க வேண்டுமென்று ஊகித்துக் கொண்ட நந்தபாலன், வியப்பும் திகைப்பும் ஒருங்கே அடைந்தவனாய், ஆஸ்பத்திரியின் மதிற்சுவருக்கு மேல் தலையை நீட்டி எட்டிப் பார்த்தான். என்ன ஆச்சரியம்! சந்தேகமே இல்லை; தங்கம் தங்கமேதான்!

"தங்கம்! தங்கம்! தங்கம்!" என்று பரவசத்துடன் அலறினான்.

அவள் நந்தபாலனைப் பார்த்ததும் அசைவற்று நின்று விட்டாள்.

"இரு, இதோ வந்துட்டேன்!" என்று சொல்லிவிட்டு, நந்தபாலன் ஆஸ்பத்திரியின் அதிகாரிகளிட



# தங்கமே தங்கம்



தங்கத்தாலே காப்புப் போட்டுத்
— தங்கமே தங்கம் — உனக்குத்
தாலிகட்டப் போறேனே நான்
தங்கமே தங்கம்!

விந்தன்

இந்தப் பாட்டு நந்தபாலனுக்கு நினைவு வந்ததும், அவன் முகத்தில் ஒரு அலாதிக் களை தோன்றி, அவனை ஆனந்த சாகரத்தில் ஆழ்த்தியது. ஆனால் அடுத்த கணத்தில், "கண்ணன் பிறந்த ஜாதியில் பிறந்து, கடைசியில் கழைக் கூத்தாடியானோமே!" என்பதை நினைத்த போது, அவனுடைய ஆனந்தம் இருந்த இடம் தெரியாமல் பறந்தது.

ஒரு சமயம் கம்பத்தின் உச்சியில் நின்று கரணம் போட்டுக் கொண்டிருந்த நந்தபாலன், தவறிக் கீழே விழுந்து விட்டான். அவன் காலில் பலமாக அடி பட்டு விட்டது. உடனே அவன் சிகிச்சை பெறுவதற்காக, அந்த ஊரிலிருந்த ஒரு பாதிரிமார் ஆஸ்பத்திரியில் அனுமதிக்கப் பட்டான். சிறிது குணமாயிருக்கவே, அவன் ஆஸ்பத்திரியின் பின் புறத் தோட்டத்தில் டாக்டரின் உத்தரவுப்படி நடை வண்டியைத் தள்ளிக் கொண்டு உலாவிக் கொண்டிருந்தான். இந்தச் சமயத்தில்தான் மேலே குறிப்பிட்ட பாட்டு நந்தபாலனின் நினைவுக்கு வந்தது. உடனே அவன் சிந்தனையில் ஆழ்ந்தான்.

* * *

எத்தனையோ கதைகளில் எத்தனையோ கதாநாயகர்களுக்கு நேர்ந்த கதிதான் நந்தபாலனுக்கும் நேர்ந்திருந்தது. சிறு வயதிலேயே தாய் தந்தையரை இழந்து விட்ட அவன் தனக்குத் தூர பந்துவும் மாமன் உறவினனுமான கோவிந்தக் கோனான் என்பவன் வீட்டில் வளர்ந்து வந்தான். தங்கம் அவனுடைய மாமாவின் பெண். இருவரும் சேர்ந்துதான் ஆடு மாடுகளை மேய்க்கச் செல்லுவார்கள். மலைப்புறத்தில் ஆடு மாடுகளை மேய விட்டு விட்டு, அவர்கள் தங்களுக்குப் பிடித்தமான ஒரு ஆலமரத்தடிக்கு வருவார்கள். அருகருகே தொங்கிக் கொண்டிருக்கும் இரண்டு ஆலம் விழுதுகளுக்கு மத்தியில் ஒரு கனத்த கம்பைக் கட்டி, நந்தபாலன் அதை ஊஞ்சலாக ஜோடிப்பான். அதில் தங்கத்தை உட்கார வைத்துத் தள்ளி விடும்போதுதான் அவன் முதன் முதலில் குறிப்பிட்ட பாட்டைப் பாடுவது வழக்கம். அப்பொழுது தங்கம் அந்தப் பாட்டை விரும்பாதவள்போல், தன் முகத்தைக் காதலின் கோபதாபத்தோடு கோணிக் கொண்டு, "ஊம், நான் அழுவேன்!" என்று நந்தபாலனைப் பயமுறுத்துவாள்.

"நீ அழணும், அப்போ உன் அழகைப் பார்க்கணும்னுதானே நான் அந்தப் பாட்டைப் பாடறேன்!" என்பான் நந்தபாலன்.

இதைக் கேட்டதும் தங்கம் 'களுக்' கென்று சிரித்து விடுவாள்.

"பார்த்தயா, தங்கம்! என்னை ஏமாத்திப் புட்டயே!" என்பான் நந்தபாலன்.

தங்கம் திடுக்கிட்டு விடுவாள். அவளுக்கு "நாம் என்ன ஏமாற்றி விட்டோம்?" என்று ஒன்றும் புரியாது. முகத்தைத் தொங்கப் போட்டுக் கொண்டு, "நான் உன்னை என்ன ஏமாத்திப் புட்டேன்? சொன்னாத்தான் ஆச்சு!" என்று அவள் ஊஞ்சலை விட்டுக் கீழே குதித்து விடுவாள்.

அப்பொழுது நந்தபாலன் சிரித்துக் கொண்டே, "அதுதான் அழாம ஏமாத்திப் புட்டியே!" என்று அவள் கன்னத்தை லேசாகத் தட்டப்போவான். தங்கம் அதற்கு எளிதில் இடம் கொடாமல், அவனைப் பாடாய்ப் படுத்தி மனம் களிப்பாள்!

அந்தி வேளை வந்ததும் அவர்கள் அங்கங்கே மேய்ந்து கொண்டிருக்கும் ஆடு மாடுகளை ஒன்று சேர்த்து ஓட்டிக் கொண்டு வருவதற்காக மலைப் புறத்திற்குச் செல்வார்கள். அப்பொழுது தங்கம் ஒரு குன்றிலிருந்து இன்னொரு குன்றுக்குச் செல்லும் போதும், குன்றை விட்டுக் கீழே குதிக்கும் போதும், அனாயாசமாகத் தாவுவாள். நந்தபாலனுக்குச் சில இடங்களில் பிரமிப்புத் தட்டி விடும். அவன் அவளைப் பின்பற்ற முடியாமல் விழிப்பான். அம்மாதிரி சமயங்களில் அவனுக்குத் தன் கையைக் கொடுத்து உதவி செய்யும்போது, தங்கம் அவனைச் சிரிப்பாய்ச் சிரிக்க வைத்து விடுவாள்.



# காலக்ஷேபம்

### அவன் கேள்வி

மாடியிலிருந்து தவறி விழுந்து மூர்ச்சையடைந்தவனுக்குச் சுற்றியிருந்தவர்கள் 'ஐஸ் வாடர்' கொண்டு வந்து குடிக்கச் சொல்லி ஆசுவாசப்படுத்தினார்கள்.



அவன்:— ஹும், இவ்வளவு உயரத்திலிருந்து விழுந்ததற்கு 'ஐஸ் வாடர்' கொடுத்தீர்களே? காப்பி வேணுமென்றால் இன்னும் எவ்வளவு உயரத்திலிருந்து விழணும்? —கா. வி.

○

### தெரியாமல் செய்தல்

**உபாத்தியாயர்:**—தெரியாமல் செய்த குற்றத்தைத்தான் நான் மன்னிப்பேன்.



**திருட்டுப் பையன்:**— அப்படியானால் என்னை ஏன் அடித்தீர்கள்? நான் ஒருவருக்கும் தெரியாமல்தானே புஸ்தகத்தைத் திருடினேன்?

**உபாத்தியாயர்:**—நீ திருடினது தெரியாதவரையில் நான் அடிக்கவில்லையே? தெரிந்த பிற்பாடுதானே உன்னைத் தண்டித்தேன்? —ஜி. குப்புசாமி.

○

### அவரேதான்!

**விச்சு:**—பாலு! அதோ பெஞ்சியிலே எங்கப்பா உட்கார்ந்திருக்கார்.



**பாலு:**—எங்கேடா? அதோ சோமன் பிரும்மஹத்தி மாதிரி ஒருவர் உட்கார்ந்திருக்காரே, அவருக்கு வலது பக்கமிருப்பவரா? இடது பக்கமிருப்பவரா?

**விச்சு:**—வலது பக்கமுமில்லை. இடது பக்கமுமில்லை. நடுவில் இருப்பவர்தான்!

—எஸ். ராஜகோபாலன்.

### பசியின் கொடுமை

**ராமய்யர் (தம் நண்பரிடம்):**— இன்று காலையில் என் மனைவியைத் தோசை வார்த்துப் போடச் சொன்னேன். சாப்பிடும்போதே என் மனைவி, "இதோடு எத்தனை தின்றிருப்பீர்கள் தெரியுமா?" என்று கேட்டாள். நான் "எண்ணவில்லை" என்றேன்.



"இதோடு போடுவது பதினைந்தாவது" என்றாள். எனக்குக் கோபம் வந்துவிட்டது. அப்படியே பட்டினியாகப் பாதியிலேயே எழுந்திருந்து ஆபீஸுக்குக் கிளம்பிவிட்டேன். —எஸ். ராமானுஜம்.

○

### சிக்கனம்!

புதிதாகக் குடித்தனத்திற்கு வந்திருந்த நாட்டுப்பெண் சிக்கனமாக இரண்டு தோசை வார்த்து வைத்திருந்தாள். இதைப் பார்த்த மாமியார், "ஏண்டியம்மா! இரண்டே இரண்டு வார்த்து வைச்சிருக்கயே. உனக்கு வேண்டாமா?



இன்னும் ஒன்று வார்த்து வையேன்" என்றாள்.

"ஐயோ! எனக்கென்ன இப்போ பிரமாதம்! நீங்கள் பாதி, அவர் பாதி கொடுத்தால் என் வயிறு நிரம்பிற்று" என்றாள் அலட்சியமாக! —தியாகு.

○

### அவன் அனுபவம்!

**மானேஜர் (வேலைக்கு மனுப்போட்டவரிடம்):**—ஆமாம், நீர் எங்கள் கம்பெனியில் சாமான்களை 'பாக்' செய்து அனுப்பும் வேலை கேட்டிருக்கிறீரே, இது விஷயத்தில் உமக்கு ஏதாவது அனுபவம் உண்டா?



**மனுதார்:**—உண்டு; நான் வெகு நாளாக, பஸ் கண்டக்டராக இருந்திருக்கிறேன்! —என். வி. துரைசாமி.

# மணியும்  கடியாரமும்

செல்லம்

ஈஸ்டர் விடுமுறையின்போது டில்லியிலிருந்து மணியின் மாமா ஊருக்கு வந்திருந்தார். அவர் மணிக்கு ஒரு கடியாரம் வாங்கி வந்திருந்தார்.

மணியிடம் கடியாரத்தைக் கொடுக்கும்போதே அவனுடைய மாமா, "கடியாரத்தை அடிக்கடி தொடாதே! உன் சிநேகிதர்களையும் தொட விடாதே; சாவி கொடுப்பது, மணியைத் திருப்பி வைப்பது இதெல்லாம் நீ செய்யக்கூடாது. கடியாரத்தில் மணி பத்தடித்தால் நீ பள்ளிக்கூடம் புறப்பட்டுச் செல்ல வேண்டியது. அவ்வளவுதான்!" என்று கண்டிப்பாக எச்சரிக்கை செய்தார். மணியும் "சரி" என்று தலையை ஆட்டி ஒப்புக் கொண்டான்.

கடியாரம் வந்ததும் மணிக்கு ரொம்ப சந்தோஷம். அன்று ஞாயிற்றுக்கிழமை யானதால், மாமா வெளியே சென்றதும் தன் சிநேகிதர்களிடமெல்லாம் சென்று பெருமை யடித்துக்கொண்டான். மணியின் கடியாரத்தைப் பார்ப்பதற்கு அவன் சிநேகிதர்களெல்லாம் அவன் வீட்டில் வந்து கூட்டம் போட்டார்கள். கூட்டத்தைப் பார்க்கவே மணிக்கு பயமாய்ப் போய் விட்டது. "எல்லோரும் சேர்ந்தாற் போல் வந்தால் காண்பிக்க முடியாது. ஒவ்வொருவராய் வந்தால்தான் காண்பிக்க முடியும்" என்று கண்டிப்பாய்க் கூறிவிட்டான்.



அவன் சிநேகிதர்களும் அவன் சொல்லியபடி ஒவ்வொருவராய் வந்தார்கள். கூடத்தின் அலமாரியில் ஒரு பெட்டியின் மேல் நன்றாய்த் தெரியும்படி, கடியாரத்தை வைத்துவிட்டு, மணி வாசற்படியில் நின்றுகொண்டு ஒவ்வொருவனாக உள்ளே விட்டான். ஆனால் சிநேகிதர்களா கேட்பவர்கள்? இடித்து நெருக்கிக்கொண்டு எல்லோரும் உள்ளே போய்விட்டார்கள். ஒருவரும் வெளியில் நிற்கவே இல்லை. மணிக்கு, "ஏண்டா இவர்களிடம் கடியாரத்தைப் பற்றிப் பெருமையடித்துக் கொண்டோம்?" என்றாகி விட்டது. மணியும் உள்ளே ஓடினான். சிநேகிதர்களெல்லாம் கடியாரத்தைச் சுற்றி நின்று கொண்டு அதைத் தொட்டுப் பார்ப்பதும் எடுத்துப் பார்ப்பதுமாயிருந்தார்கள். மணிக்குக் கோபம் கோபமாய் வந்தது. "கடியாரத்தைத் தொடாதீர்கள். உடைந்து போய் விட்டால் என் மாமா ரொம்பக் கோபித்துக் கொள்வார்" என்று சொன்னான். சிநேகிதர்கள் கேட்கவில்லை.

அவர்களைத் திருப்பி அனுப்புவதற்குள் அவன் பாடு மிகவும் கஷ்டமாகி விட்டது. சிநேகிதர்கள் சென்றவுடன் மணிக்குக் கடியாரத்தை எடுத்துச் சாவி கொடுத்து அலாரம் அடிக்க

வைக்கவேண்டும் போலிருந்தது. அப்படியே அலாரம் வைத்துப் பார்த்தான். அரை மணி நேரம் வேகமாக ஓடச் செய்தான். இன்னும் கடியாரத்தினிடம் என்னவெல்லாம் விளையாடக் கூடுமோ அவ்வளவும் விளையாடிப் பார்த்தான். அன்றிரவெல்லாம் அவனுக்குத் தூக்கமே இல்லை. அலாரம் கடியாரத்தின் 'டக் டக்' என்ற சத்தமே அவன் காதுகளில் ஒலித்துக் கொண்டிருந்தது.



பொழுது விடிந்ததும் கடியாரத்தில் மணி ஒன்பது. "அதிக நேரம் தூங்கிவிட்டோமே!" என்று அவசரம் அவசரமாகப் பல் துலக்கி ஸ்நானம் செய்தான். சாப்பிட்டுவிட்டுப் பள்ளிக்கூடத்திற்கு ஓட்டம் எடுத்தான். அந் நேரத்திற்குப் பள்ளிக்கூடத்தின் வாயிற் கதவு கூடத் திறக்கப்படாமலிருப்பதைக் கண்ட மணிக்குக் கடியாரத்தின் மீது பிரமாதமாய்க் கோபம் வந்தது.



மறு நாள் மணி எழுந்திருக்கும்போது கடியாரத்தில் மணி ஐந்து கூட அடிக்கவில்லை. "ரொம்ப சீக்கிரம் எழுந்து விட்டோமே!" என்று எண்ணிக்கொண்டு, காரியங்களை நிதானமாகச் செய்துவிட்டுப் பள்ளிக்கூடம் சென்றான். அப்போது பள்ளிக்கூடத்தில் மணி பன்னிரண்டு ஆகி மூன்று பாடங்கள் நடந்து முடிந்து விட்டன. உபாத்தியாயர் மணியை 'லேட்'டாக வந்ததற்காகப் பெஞ்சியின்மீது நிற்க வைத்தார். மணி சாயந்திரம் அழுது கொண்டே கடியாரத்தை வந்து பார்த்தான். அப்போது மட்டும் மணி சரியாகவே இருந்தது.

மணி அழுவதைக் கண்ட கடியாரம் சிரித்துக்கொண்டே, "உன் மாமா என்னைப் பற்றி உன்னிடம் என்ன சொன்னார்? 'சாவி கொடுப்பதோ, அலாரம் வைப்பதோ எதையும் நீ செய்யக் கூடாது!' என்று எச்சரித்தாரல்லவா? நீ அதன்படி நடந்தாயா? உன் சிநேகிதர்களையெல்லாம் கூட்டி வந்து என்னை உபத்திரவப்படுத்தினாயே? நீயே என்னைத் தொட்டுச் சாவி கொடுத்து அலாரம் வைத்து என்னவெல்லாமோ செய்தாயே! அதனால்தான் நான் உனக்குச் சரியான நேரம் காட்டாமல் அலைக்கழித்தேன். இனிமேலாவது புத்தி வந்ததா?" என்று கடியாரம் கேட்டது.

"ஏ, கடியாரம்! எனக்குப் புத்தி வந்தது! இனிமேல் நான் உன்னைத் தொடவில்லை. நான் விஷமம் செய்யும்போது மாமாவுக்குத்தான் கோபம் வருகிறதென்றால் உனக்கும் மூக்குக்கு மேல் கோபம் வருகிறது. நீ என்னை இரண்டு நாள் அலைக்கழித்தது போதும், இதை மாமாவிடம் வேறு சொல்லி எனக்கு அடி வாங்கிக் கொடுக்காதே" என்று கெஞ்சினான் மணி.

இதைக் கேட்டுக் கொண்டு வந்த மாமா, "நான் கடியாரத்தைத் தொடாதே என்றேனே, கேட்டாயா? இனிமேல் சமர்த்தாயிரு. இல்லையோ, பள்ளிக்கூடம் போகக் கடியாரம் சரியான மணி காட்டாது" என்றார்.

அன்று முதல் மணியும் அவனுடைய சிநேகிதர்களும் கடியாரத்தைத் தொடுவதில்லை; கடியாரமும் தவறான நேரத்தைக் காட்டி அவர்களைத் தவிக்க விடுவதில்லை!





# அவளுக்காக
# ரூ. 10 ஐ ரூ. 15
# ஆகச் செய்யுங்கள்

இன்னும் பன்னிரண்டு வருஷங்கள் கழித்து இச் சிறுமிக்குக் கல்யாணம் செய்ய வேண்டி வரும். அவள் தகப்பனார் முன் யோசனையோடு இல்லாவிடில், கல்யாணச் செலவுகளுக்கும் முக்கியமாக வரதக்ஷிணை கொடுப்பதற்கும், தேவையான பணத்தைப் பெற மார்வாடியிடம் போக வேண்டியதுதான்.

விஷயமறிந்த பெற்றோர்கள் பிற்காலத்தில் ஏற்படும் செலவுகளை எதிர்பார்த்து, முன் கூட்டியே பணம் சேகரித்து வைக்கிறார்கள். அத்தகையோர்களுக்கு நாஷனல் சேவிங்ஸ் சர்ட்டிபிகேட்டுகளின் முதலீடு மதிப்பு நன்கு விளங்கும். நாஷனல் சேவிங்ஸ் சர்ட்டிபிகேட்டுகளில் இன்று முதலிட்ட ரூ. 10, பன்னிரண்டு வருஷங்களில் உத்திரவாதமுள்ள ரூ. 15 ஆக வளரும். இந்த சர்ட்டிபிகேட்டுகளில் முதலிட்ட தொகைகளுக்கு வருமான வரி கிடையாது. ஒவ்வொருவரும் ரூ. 5,000 வரைக்கும் இந்த சர்ட்டிபிகேட்டுகளை வாங்கலாம். போட்ட பணமும் மிகப் பத்திரமாக இருக்கும். மேலும், முதல் மூன்று வருஷங்களுக்குப் பிறகு எப்பொழுது வேண்டுமானாலும் இந்த நாஷனல் சேவிங்ஸ் சர்ட்டிபிகேட்டுகளைப் பணமாக மாற்றிக் கொள்ளலாம். உங்கள் மகள் பெயரில் இன்றே நாஷனல் சேவிங்ஸ் சர்ட்டிபிகேட்டுகள் வாங்குங்கள்; அவள் கல்யாணத்தின் போது நூற்றுக்கு நூற்றைம்பதாக சீதனம் கொடுக்கலாம்.

உங்கள் சேமிப்பை யெல்லாம் லாபமும், பத்திரமும் உள்ள

## நாஷனல் சேவிங்ஸ்
## சர்ட்டிபிகேட்டுகளை

வாங்குவதில் உபயோகியுங்கள்

இன்றே தொடங்குங்கள் !

**பதிவு செய்தல் — ஒரு நல்ல முன்னேற்பாடு.**

அஸாம், வங்காளம், பீஹார், ஒரிஸா, சென்னை மாகாண வாசிகளின் சௌகரியத்துக்காக, லக்ஷ்மணபுரியில் ஐக்கிய மாகாண போஸ்ட் மாஸ்டர் ஜெனரலின் மேற்பார்வையில் ஒரு மத்தியப் பதிவு ஆபீஸ் ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. இங்கு டிபென்ஸ் சேவிங்ஸ் சர்ட்டிபிகேட்டுகள், தபாலாபீஸ் காஷ் சர்ட்டிபிகேட்டுகள், நாஷனல் சேவிங்ஸ் சர்ட்டிபிகேட்டுகளை வைத்திருப்பவர்கள் தங்கள் சர்ட்டிபிகேட்டுகளின் விபரங்களை இலவசமாகப் பதிவுசெய்து கொள்ளலாம். இதன் மூலம், சர்ட்டிபிகேட்டுகள் காணாமற் போனாலுஞ்சரி, அழிந்து விட்டாலுஞ்சரி, தங்கள் உரிமையை நிரூபிப்பது சுலபம். பூரா விபரங்களையும் உங்களூர் தபாலாபீஸில் கேட்டுத் தெரிந்து கொள்ளுங்கள்.

**சேவிங்ஸ் பாங்கி உள்ள எந்தத் தபாலாபீஸிலும் நாஷனல் சேவிங்ஸ் சர்ட்டிபிகேட்டுகளை வாங்கலாம்.**

CPU—416

யிருக்கிறேன். நீங்கள் எனக்காகப் பேசுவீர்கள் அல்லவா?"

"தம்பி! உன்னைப் போன்ற வீரனை, தாளம் போட்டுக் கொண்டு பாசுரம் பாடுவதற்கும், கல்லுளியை வைத்துக் கொண்டு கல்லைச் செதுக்குவதற்கும் உன் மாமா அனுப்பி வைத்தாரே!"

"சிற்பக்கலை தெய்விகக் கலை, ஐயா!"

"போதும், போதும்! தெய்வக்கலை, கடவுட் கலை என்றெல்லாம் சொல்லிச் சொல்லித்தான் மகேந்திர சக்கரவர்த்தி பல்லவ சாம்ராஜ்யத்தை இந்த கதிக்குக் கொண்டுவந்து விட்டார். சக்கரவர்த்தியிடம் நானும் ஒரு விண்ணப்பம் செய்துகொள்ளப் போகிறேன். 'மலையைக் குடைவது, பாறையைச் செதுக்குவது முதலிய காரியங்களை எல்லாம் நிறுத்துங்கள். பல்லவ ராஜ்யத்திலுள்ள அவ்வளவு சிற்பிகளையும் விட்டு ஒவ்வொரு கோயிலிலும் ஒரு பாரத மண்டபம் கட்டச் சொல்லுங்கள். அந்த மண்டபங்களில் ஒவ்வொரு நாளும் ஜனங்கள் கூடிக் கேட்கும்படி பாரதம் வாசிக்க ஏற்பாடு செய்யுங்கள்' என்று சக்கரவர்த்தியிடம் நான் கேட்டுக் கொள்ளப் போகிறேன்."

"இதெல்லாம் எதற்காக?" என்று பரஞ்சோதி கேட்டான்.

"யுத்தத்தில் ஜயிப்பதற்காகத்தான். இந்த யுத்தத்தை மகேந்திர சக்கரவர்த்தியாலும் பல்லவ வீரர்களாலும் மட்டும் ஜயித்து விட முடியாது. காஞ்சிக் கோட்டையைப் பரஞ்சோதியே காவல் புரிந்தாலுங்கூட முழு வெற்றி கிடைத்து விடாது. நாட்டிலுள்ள மக்கள் எல்லாருமே வீரமும் பௌருஷமும் அடைய வேண்டும். உயிரைத் திரணமாக மதிக்கக் கற்றுக் கொள்ள வேண்டும்."

"ரொம்ப நல்ல யோசனை, ஐயா! மகேந்திர சக்கரவர்த்தியிடம் இதை நீங்கள் தெரிவித்தால் கட்டாயம் ஒப்புக்கொள்வாரென்றே நினைக்கிறேன்."

"சக்கரவர்த்தியிடம் உனக்கு அபார நம்பிக்கை இருக்கிறது, பரஞ்சோதி! இது தெரிந்தால் சக்கரவர்த்திக்கே பெருமையாய்த்தானிருக்கும்" என்று வஜ்ரபாஹு கூறி, பரஞ்சோதியை அன்புடன் தழுவிக்கொண்டு சொன்னான்:—"எனக்கு ஒரு மகன் இருக்கிறான், தம்பி! அவனுக்கும் உன்னுடைய வயதுதான். உன்னைப் போலவே அவனும் மகா வீரன். ஆனால் உனக்குள்ள நிதானம் மட்டும் அவனிடம் இல்லை. ரொம்பப் பதட்டமுள்ளவன். நீங்கள் இருவரும் சேர்ந்தீர்களானால் எவ்வளவோ அரும் பெரும் காரியங்கள் செய்யலாம்!"

அப்போது பரஞ்சோதி, நாத் தழுதழுக்க, "ஐயா! சிறு பிராயத்தில் நான் என் தந்தையை இழந்தேன். என்னையும் உங்கள் புதல்வனாகவே ஏற்றுக் கொள்ளுங்கள்!" என்றான்.

* * *

வீரன் வஜ்ரபாஹு பாசறைக்குள் புகுந்து சென்ற பிறகு, பரஞ்சோதிக்கு ஒவ்வொரு விநாடியும் ஒரு யுகமாகத் தோன்றியது. சக்கரவர்த்தியிடமிருந்து தன்னை அழைத்து வரும்படி ஆக்ஞை வருமென்று அவன் ஆவலுடன் காத்திருந்தான்.

சற்று நேரத்துக்கெல்லாம் அந்தப் பல்லவ சைனியத்தின் பாசறையில் ஒரு பெரிய கலகலப்பு ஏற்பட்டது. திடீரென்று பல ஆயிரம் வீரர்களின் குரல்கள் எழுப்பிய ஜயகோஷம் வான வெளியையெல்லாம் நிரப்பி மலையடிவாரம் வரை சென்று எதிரொலி செய்தது. முரசங்களும், பேரிகைகளும் ஆர்த்த ஒலியானது வானமுகடு வரை சென்று முட்டித் திரும்பியது.

பாசறையின் வாசலில் நின்ற காவலர்களைப் பரஞ்சோதி நெருங்கி, மேற்கூறிய கோலாகலத்தின் காரணம் என்னவென்று கேட்டான்.

"மகேந்திர பல்லவ சக்கரவர்த்தி பாசறைக்கு வந்து விட்டார்!" என்று மறுமொழி கிடைத்தது.

---

**சிவகாமியின் சபதம்** என்னும் சரித்திர அடிப்படை கொண்ட கதையில், **"பரஞ்சோதி யாத்திரை"** — என்னும் முதற் பாகம் முடிவடைந்தது. —

---

அனுப்புவார். அதுவரையில் நீ பாசறைக்கு வெளியிலேதான் இருக்க வேண்டும்."

"சக்கரவர்த்தி பாசறையில் இருக்கிறாரா? காஞ்சியிலிருந்து இளைமயவரைப் பற்றி அப்புறம் தகவல் இல்லை என்றீர்களே?"

"இதற்குள்ளே வந்திருக்கலாமல்லவா?"

"ஐயா! சக்கரவர்த்தியை நான் ஒரு தடவை நேரில் பார்க்க விரும்புகிறேன். பார்க்க முடியுமா?" என்று பரஞ்சோதி ஆர்வத்துடன் கேட்டான்.

"எதற்காகச் சக்கரவர்த்தியைப் பார்க்க விரும்புகிறாய்?" என்றான் வஜ்ரபாஹு.

"காஞ்சிநகர்க் காவலைப் பற்றி ஒரு விஷயம் சொல்ல வேண்டும்."



"அது என்னவென்று நான் சொல்லட்டுமா?"

"எங்கே? சொல்லுங்கள்!"

"புத்த விஹாரத்தில் உள்ள இரகசியச் சுரங்க வழியைப் பற்றிச் சொல்லப் போகிறாய்! அது சக்கரவர்த்திக்குத் தெரியும், தம்பி!"

"சக்கரவர்த்திக்கு அது தெரியும் என்று எனக்கும் தெரியும்."

"என்னமாய்த் தெரியும்?"

"வழியில் நீங்கள் யோசனையில் ஆழ்ந்திருந்த போதெல்லாம் நானும் சில விஷயங்களைப் பற்றி யோசித்தேன். புத்த விஹாரத்தைப் பற்றிச் சந்தேகம் இராதிருந்தால் சக்கரவர்த்தி நடு ராத்திரியில் அங்கே ஏன் வந்து நிற்கிறார்?"

"உன்னை என்னமோ என்று நினைத்தேன், தம்பி! வெகு புத்திசாலி நீ! சக்கரவர்த்தியிடம் காஞ்சிக் கோட்டையைப் பற்றி வேறு என்ன சொல்லப் போகிறாய்!"

"கோட்டைக் காவலை என்னிடம் ஒப்புவிக்கும்படி கேட்டுக் கொள்ளப் போகிறேன்."

"என்ன?"

"காஞ்சிமா நகரின் கோட்டைப் பாதுகாப்பை என்னிடம் ஒப்புவிக்கும்படி கேட்டுக் கொள்ளப் போகிறேன்."

"உன்னால் முடியுமா?"

"பதினாயிரம் வீரர்களும் முப்பதினாயிரம் வேல்களும் கொடுத்தால் என்னால் காஞ்சியைக் காப்பாற்ற முடியும்."

"ஓகோ! மதயானையின் மீது வேல் எறிந்த வீரன் நீ அல்லவா? சிவகாமியைக் காப்பாற்றியது போல் காஞ்சி சுந்தரியாகிய கன்னிகையையும் காப்பாற்ற விரும்புகிறாய்போலிருக்கிறது. ஆனால், முன் பின் தெரியாத உனனிடம் அந்தப் பொறுப்பைச் சக்கரவர்த்தி ஒப்புவிப்பாரா?"

"அதற்கு வேண்டிய பரீட்சை எதுவானாலும் கொடுக்கச் சித்தமா



## அத்தியாயம் 47

# பிரயாண முடிவு

சூரியாஸ்தமன சமயத்தில் ஒரு மலைப் பாதையின் முடுக்குத் திரும்பியதும், பல்லவ சைன்யம் தண்டு இறங்கியிருக்கும் பாசறை தென்பட்டது. அதைப் பார்த்ததும் வஜ்ரபாஹு கவலையுடன் பேசியதற்கு எவ்வளவு தூரம் காரணம் உண்டு என்பதைப் பரஞ்சோதி உணர்ந்தான்.

வாதாபி சைன்யத்துக்கும் பல்லவ சைன்யத்துக்கும் அவ்வளவு மலைக்கும் மடுவுக்குமான தாரதம்மியம் இருந்தது.

வாதாபி சைன்யத்தில் பத்தில் ஒரு பங்குகூடப் பல்லவ சைன்யம் இராது என்று தோன்றியது.

பல்லவ சைன்யத்தைப் பார்த்ததும் "ஆஹா!" என்று பரஞ்சோதி கூவிய போது, அவனுடைய குரலில் அளவில்லாத ஏமாற்றம் தொனித்தது.

"தம்பி! பார்த்தாயா?" என்றான் வஜ்ரபாகு.

"பார்த்தேன், ஐயா!"

"இன்னமும் நீ நம்புகிறாயா, பல்லவ சைன்யம் ஜயிக்கும் என்று?"

"கட்டாயம் ஜயிக்கும்!" என்று பரஞ்சோதி அழுத்தமாகச் சொன்னான்.

"எதனால் அவ்வளவு அழுத்தமாகச் சொல்கிறாய்?"

"பல்லவ சைன்யத்தின் பட்சத்தில் தர்ம பலம் இருக்கிறது."

"அவ்வளவுதானா?"

"அதோடு, மகேந்திர சக்கரவர்த்தியும் இருக்கிறார்!"

வஜ்ரபாஹுவின் முகத்தில் ஒரு மர்மமான புன்னகை தோன்றியது.

"ஏது, ஏது, மகேந்திர சக்கரவர்த்தியிடம் உனக்கு அபார நம்பிக்கை இருக்கிறதே?" என்றான்.

"ஆம், ஐயா!"

"சக்கரவர்த்தியை நீ பார்த்திருக்கிறாயா?"

"முன்னம் இரண்டு தடவை பார்த்திருக்கிறேன்."

"இரண்டு தடவையா? எங்கெங்கே?"

"ஆயனர் வீட்டில் புத்த விக்கிரகத்துக்குப் பின்னால் ஒளிந்திருக்கும்போது ஒரு தடவை பார்த்தேன்."

"இன்னொரு தடவை?"

"காஞ்சிமா நகரில் நடு ராத்திரியில் புத்த விஹாரத்துக்கு எதிரே நிழல் மறைவில் நின்றதைப் பார்த்தேன்."

"சக்கரவர்த்தி நள்ளிரவில் அங்கே எதற்காக வந்தார்?"

"எனக்கு எப்படித் தெரியும்? வேவு பார்க்க வந்திருக்கலாம்."

"சக்கரவர்த்தி எப்படி இருந்தார்?"

"கிட்டத்தட்ட உங்களைப் போல் இருந்தார்! உங்களைப் போலவே மீசை வைத்திருந்தார். உடையும் இதே மாதிரி இருந்தது."

"ஆமாம்; நான்கூடக் கேள்விப் பட்டிருக்கிறேன்; சக்கரவர்த்தி சில சமயம் என் மாதிரி மாறு வேடம் பூண்டு ஊர் சுற்றுவது உண்டு என்று. அவரை நான் என்றும் என்னை அவர் என்றும் கூடச் சிலர் சந்தேகித்திருக்கிறார்கள்."

"எனக்கு அம்மாதிரியெல்லாம் சந்தேகம் கிடையாது, ஐயா!"

"வாதாபி சைன்யம், பல்லவ சைன்யம் இரண்டையும் நீ பார்த்திருக்கிறாய், தம்பி! இன்னமும் பல்லவ சைன்யத்தில் சேர்வதற்கு இஷ்டப்படுகிறாயா?"

"இஷ்டப்படுவது மட்டுமல்ல; துடித்துக்கொண்டிருக்கிறேன். இங்கே நாம் நிற்கும் நேரமெல்லாம் வீண் போவதாகவே நினைக்கிறேன்."

"அப்படியானால், எனக்கு விடை கொடு!"

"என்ன? என்னை இங்கே விட்டு விட்டா போகிறீர்கள்?"

"ஆமாம்; நான் முதலில் போய்ச் சக்கரவர்த்தியைப் பார்த்து உன்னைப் பற்றிச் சொல்கிறேன். அவர் இஷ்டப் பட்டால் உன்னை அழைத்துவர ஆன்

சற்றுப் பொறுத்துப் பரஞ்சோதி "ஐயா! நீங்கள் கொடுத்த ஓலையின் பலனாக வாதாபி சைன்யம் காஞ்சிக்கு வராமல் திரும்பிப் போய் விடுமா?" என்று கேட்டான்.

"பரஞ்சோதி! காஞ்சி என்ற பெயரைக் கேட்டதும் புலிகேசியின் கண்களில் தோன்றிய ஆசை வெறியை நீ பார்த்திருந்தாயானால், இவ்விதம் கேட்க மாட்டாய். என்னை அச்சுத விக்கிராந்தனுடைய சந்ததியில் வந்தவனாக நினைத்துக்கொண்ட புலிகேசி..."

"அது யார் அச்சுத விக்கிராந்தன்?" என்று பரஞ்சோதி இடைமறித்துக் கேட்டான்.

"பாண்டிய நாட்டுக்கும் சோழ நாட்டுக்கும் மத்தியில் இருநூறு வருஷத்துக்கு முன் தனி அரசு செலுத்திய அச்சுதக் களப்பாளனைப் பற்றி நீ கேட்டதில்லையா? அவனைப் பற்றிப் புத்த முனிவர் ஒருவர் காவியம் எழுதியிருக்கிறார். அவனுடைய வம்சத்தில் இப்போது ஒருவரும் கிடையாது. ஆனாலும், நான் அச்சுதக் களப்பாளன் வம்சம் என்றதும் புலிகேசி நம்பி விட்டான். 'நீ காஞ்சி நகர் பார்த்திருக்கிறாயா?' என்று கேட்டான். 'பார்த்திருக்கிறேன்' என்றதும், காஞ்சிநகர்க் காட்சிகளை வர்ணிக்கும்படி சொன்னான். நான் அவ்விதமே காஞ்சியை வர்ணித்தபோது, புலிகேசியின் முகத்தில் தோன்றிய பரபரப்பைப் பார்க்க வேணுமே? பசியுடைய நாய் எலும்புத் துண்டைக் கண்டதும் அதனுடைய நாவில் எப்படி ஜலம் ஊறுமோ, அம்மாதிரி காஞ்சியை நான் வர்ணித்த போது புலிகேசியின் நாவில் ஜலம் ஊறிற்று. எலியைப் பார்த்த பூனையின் கண்களில் தோன்றும் ஆசை வெறி புலிகேசியின் கண்களில் தோன்றிற்று. நான் சொல்கிறேன், கேள், பரஞ்சோதி! காஞ்சிமா நகருக்கு இதற்கு முன்னால் எத்தனையோ ஆபத்துக்கள் வந்திருக்கின்றன. ஆனால் இதைப் போன்ற பேரபாயம் இது வரையில் வந்தது கிடையாது. ஏனெனில், புலிகேசியின் ஆசையானது எந்த உருக் கொள்ளுமோ, சொல்ல முடியாது. இராவணன் சீதையைப் பார்த்து என்ன சொன்னான் உனக்குத் தெரியுமா? 'என்னிடம் நீ ஆசை கொள்கிறாயா? அல்லது உன்னைக் காலைப் போஜனத்துக்குப் பட்சணமாகச் சாப்பிட்டு விடட்டுமா?' என்றானாம். அது போல், புலிகேசி, காஞ்சி நகரைக் கட்டி ஆள ஆசைப் பட்டாலும் படுவான்; அல்லது அதை அக்கினிக்கு இரையாக்க விரும்பினாலும் விரும்புவான். புலிகேசியின் காதலாகிய விபத்திலிருந்து காஞ்சிமா தேவியைக் கடவுள்தான் காப்பாற்ற வேண்டும்!" என்று வஜ்ரபாஹு கூறி விட்டு, நெடிய மௌனத்தில் ஆழ்ந்தான்.



வஜ்ரபாஹு சிரித்தான். அந்தச் சிரிப்பில் ஏளனம் தொனித்தது.

"ஏன் சிரிக்கிறீர்கள், ஐயா!"

"காஞ்சிக் கோட்டையை ரொம்பவும் பத்திரப்படுத்தி யிருப்பதாகத்தான் நான்கூட நினைத்தேன். ஆனால் இப்போது அது எவ்வளவு தவறு என்று தெரிகிறது."

"ஏன்? கோட்டைக்குப் பத்திரம் போதாதா?" என்று பரஞ்சோதி கேட்டான். கோட்டைக்குள்ளேயிருந்து தன்னை இரகசியச் சுரங்க வழியாக நாகநந்தி வெளியேற்றியது அவன் ஞாபகத்துக்கு வந்தது.

"வாதாபி யானைகள் சாராயத்தைக் குடித்து விட்டு வந்து கோட்டைக் கதவுகளை மோதும் போது, அந்தக் கோட்டைக் கதவுகள் எப்படி நொறுங்கிச் சின்னா பின்னமாகப் போகின்றன என்பதை நினைத்தால் எனக்குச் சிரிப்பு வருகிறது" என்றான் வஜ்ரபாகு.

"இதென்ன விந்தை? யானைகள் சாராயம் குடிக்குமா?"

"ஆமாம்; பரஞ்சோதி, ஆமாம்! யானைகளை மாமிச பக்ஷணிகளாகச் செய்ய முடியவில்லை; ஆனால் மதுபானம் செய்யப் பழக்கியிருக்கிறார்கள். வாதாபி சைன்யத்தில் ஆயிரக்கணக்கான வண்டிகளில் பெரிய பெரிய பீப்பாய்களில் சாராயம் கொண்டு வருகிறார்கள்! யானைகளைச் சாராயம் குடிக்கச் செய்து கோட்டைக் கதவுகளை முட்டச் செய்வார்களாம்!"

"இது என்ன அநாகரிக யுத்தம்?" என்றான் பரஞ்சோதி.

"யுத்தமே அநாகரிகந்தான்" என்றான் வஜ்ரபாகு.

"ஒரு நாளும் இல்லை!" என்றான் பரஞ்சோதி.

பிறகு, "எல்லா யுத்தத்தையும் அநாகரிக யுத்தம் என்று சொல்ல முடியுமா? நாட்டைக் காப்பதற்காக மகேந்திர சக்கரவர்த்தி நடத்தும் யுத்தம் அநாகரிக யுத்தமாகுமா?" என்றான்.

"மகேந்திர சக்கரவர்த்தியின் பெயரை என் காது கேட்கச் சொல்லாதே! தேசப் பாதுகாப்பை அசட்டை செய்து விட்டு ஆடலிலும் பாடலிலும் அவர் காலங் கழித்ததை நினைத்தால் எனக்குக் கோபமாய் வருகிறது!"

பரஞ்சோதி வஜ்ரபாஹுவின் முகத்தைச் சற்றுக் கவனமாய்ப் பார்த்து விட்டு, "காஞ்சிக் கோட்டையைப் பாதுகாப்பது கடினம் என்று நினைக்கிறீர்களா?" என்று கேட்டான்.

"வாதாபி சைன்யம் நேரே காஞ்சிக்கு வந்தால் காஞ்சிக் கோட்டையைக் கடவுளால் கூடக் காப்பாற்ற முடியாது."

"அப்படி வராதல்லவா?"

"வராமலிருக்கத்தான், ஓட முயன்றவன் முதுகில் வேலை எறிந்து கொல்ல வேண்டியதாயிற்று."

அந்தக் காரியம் வஜ்ரபாஹுவுக்கு எவ்வளவு வெறுப்பை அளித்தது என்பது அவன் முக பாவத்திலிருந்து தெரிந்தது.

"அந்த வீரன் ஓடிப் போயிருந்தால்? ..."

"இரும்பிப் புலிகேசியிடம் போய்ச் சொல்லியிருப்பான். புலிகேசிக்கு என்னைப் பற்றியும் நான் கொடுத்த ஓலையைப் பற்றியும் சந்தேகம் தோன்றியிருக்கும்."

"நீங்கள் கொடுத்த ஓலையில் என்ன எழுதியிருந்தது, ஐயா!"

"அது புலிகேசிக்கும் மகேந்திர பல்லவருக்கும் மட்டும் தெரிந்த இரகசியம்."

"எழுதியிருக்கும் விஷயம் தெரியாமல் ஓலை கொண்டு போகக்கூடாது என்று எனக்குப் புத்தி சொன்னீர்களே?"

"பிறத்தியாருக்குப் புத்தி சொல்வதில் வஜ்ரபாஹுவுக்கு இணை உலகத்திலேயே கிடையாது என்று பிரசித்தியாயிற்றே! உனக்குத் தெரியாதா?"

விசாலமான ஆலமரங்களையும், பசுமையான தென்னந் தோப்புக்களையும் பார்க்கும்போதெல்லாம் பெருமூச்சு விடுவான். "மறுபடியும் நாம் இந்தப் பக்கம் வரும்போது கண் குளிரும் இந்தப் பசுமையைக் காண்போமோ, என்னவோ?" என்பான்.

வஜ்ரபாஹுவின் இந்த அதிசயமான கவலைக்குக் காரணம் என்னவென்று பரஞ்சோதி வற்புறுத்திக் கேட்டபோது, "தம்பி! நீ அந்த வாதாபி சைன்யத்தின் பாசறையை முழுதும் சுற்றிப் பார்க்கவில்லை. நான் பார்த்தேன்! அந்தப் பிரம்மாண்டமான யானைப் படையையும் நினைத்து, இந்தப் பசுமையான மரங்களையும் பார்த்தால், எனக்குக் கண்ணில் ஜலம் வருகிறது" என்றான்.

"மனிதர்களுக்காகவும் ஜீவப் பிராணிகளுக்காகவும் இரக்கப்படுகிறவர்களை நான் பார்த்திருக்கிறேன். மரங்களுக்காகக் கண்ணீர் விடுகிறவரை இதுவரையில் கண்டதில்லை" என்றான் பரஞ்சோதி.

"மரங்களுக்கு நான் இரங்கும்போது, மனிதர்களுக்காகவுந் தான் இரங்குகிறேன், தம்பி! மனிதர்களின் வாழ்க்கை பெரிதும் மரங்களைத்தான் பொறுத்திருக்கிறது. பசுமையான மரங்கள் செழித்து வளர்ந்த பிரதேசங்களிலே மழை அதிகமாகப் பெய்யும். மழை பெய்தால் ஏரிகள் நிரம்பும்; நதியில் பிரவாகம் வரும்; நீர்வளம் செழிக்கும்; ஜனங்களும் சுபிட்சமாய் வாழ்வார்கள். ஒரு பிரதேசத்திலுள்ள மரங்களையெல்லாம் அழித்து விட்டால், அங்கே மழை குன்றும்; கொஞ்ச நாளில் கொடிய பஞ்சம் தோன்றும். ஆனால், காவேரி நதி பாயும் சோழ வள நாட்டில் பிறந்து வளர்ந்த உனக்கு இதெல்லாம் எங்கே தெரியப் போகிறது?" என்றான் வஜ்ரபாஹு.

"உண்மைதான், ஐயா! பசுமையான மரங்களின் முக்கியத்தை இவ்வளவு தூரம் நான் இதற்குமுன் உணர்ந்தது கிடையாது. ஆனால் நீங்கள் சொல்வதற்கும் வாதாபி சைன்யத்துக்கும் என்ன சம்பந்தம்?" என்று பரஞ்சோதி கேட்டான்.

"ஒரு யானை ஒரு நாளில் எவ்வளவு ஆகாரம் சாப்பிடும் தெரியுமா, தம்பி?" என்று வஜ்ரபாகு வினவினான்.

"தெரியாது, ஐயா!"

"ஆறு மரக்கால் அரிசி, ஒன்பது தார் வாழைப்பழம், இருபத்தைந்து தேங்காய், ஒரு ஆல மரத்தில் பாதி — இவ்வளவையும் சாப்பிட்ட பிறகும் அதன் பசி அடங்காது!"

"அம்மம்மா!" என்றான் பரஞ்சோதி.

"இவ்வளவுக்கும் மேல் யானைப் பாகனுக்கும் அதன் வயிற்றில் இடம் இருக்கும்! ஆனால் யானைகள் சைவ உணவு விரதங்கொண்டவை யாகையால்தான் யானைப்பாகனைச் சாப்பிடுவதில்லை!"

பரஞ்சோதி சிரித்து விட்டு, "வாதாபி படையில் அப்படி எத்தனை யானைகள் இருக்கின்றன?" என்று கேட்டான்.

"பதினையாயிரம் யானைகள் தம்பி, பதினையாயிரம் யானைகள்! இவ்வளவு யானைகளும் ஒரு தடவை காஞ்சி நகர் வரையில் வந்து விட்டுத் திரும்பினால் போதும்; அவை வந்து போன வழியெல்லாம் பசுமையென்பதே இல்லாமல் பாலைவனமாய்ப் போய் விடும்."

"காஞ்சி நகரம் வரையில் வாதாபி சைன்யம் வந்து விடும் என்று நினைக்கிறீர்கள்?"

"இந்தப் பதினையாயிரம் யானைகளையும் ஐந்து லட்சம் காலாட் படைகளையும் யாரால் தடுத்து நிறுத்த முடியும், தம்பி! கடவுளே பார்த்து நிறுத்தினால்தான் நிறுத்தியது!"

"காஞ்சிக் கோட்டையை ஏன் அவ்வளவு ஜாக்கிரதையாகப் பத்திரப்படுத்தினார்கள் என்று எனக்கு அப்போது ஆச்சரியமாயிருந்தது. இப்போதுதான் அதன் காரணம் விளங்குகிறது."




## அத்தியாயம் 46

## புலிகேசியின் காதல்

வறண்ட மலைப்பிரதேசங்களையும், அடர்ந்த வனங்களையும், நீர் வற்றி வெண் மணல் பரந்த நதிகளையும், இனி கொஞ்சும் மாந்தோப்புக்கள் சூழ்ந்த அழகிய கிராமங்களையும் கடந்து வஜ்ரபாஹுவும் பரஞ்சோதியும் இடைவிடாத பிரயாணம் செய்து கொண்டு போனார்கள்.

வழியெல்லாம் வஜ்ரபாகுவின் விசித்திர நடத்தை பரஞ்சோதிக்கு மிக்க ஆச்சரியத்தை விளைத்து வந்தது.

சில சமயம் வஜ்ரபாஹு வீர ரஸம் செறிந்த பாரத யுத்தக் கதைகளை வீராவேசத்துடன் கூறுவான். அர்ச்சுனனுடைய வில் தொழில் திறன்களையும், அபிமன்யுவின் அஸகாய சூரத்தனத்தையும், பீமனுடைய கதாயுதம் நிகழ்த்திய விந்தைகளையும் பற்றி வஜ்ரபாகு சொல்லும்போதெல்லாம் பரஞ்சோதிக்கு ரோமாஞ்சனம் உண்டாகும். குருக்ஷேத்திரப் போர்க்களத்தில் தானும் பாண்டவர்களின் கட்சியில் நின்று வீரப் போர் செய்வதாக எண்ணிக்கொள்வான். அவனையறியாமலே அவனுடைய கைகள் வில்லை வளைத்து நாணேற்றும்; வேலை வீசும்; வாளைச் சுழற்றும்.

இன்னும் சில சமயம், வஜ்ரபாகு ஆழ்ந்து யோசனை செய்யத் தொடங்கி விடுவான். அப்போது பரஞ்சோதி கேட்கும் கேள்விகளுக்கு அவன் விடை சொல்லமாட்டான். பரஞ்சோதியின் கேள்விகள் அவனுடைய காதிலேயே விழாதது போலத் தோன்றும். அப்போதெல்லாம் அவன் குதிரையை அதிவேகமாகச் செலுத்துவான். மேடு, பள்ளம், காடு, தண்ணீர் என்று பாராமல் குதிரையை நாலு கால் பாய்ச்சலில் விடுவான். அவன் பின்னோடு பரஞ்சோதி குதிரையைச் செலுத்தக் கொண்டு செல்வது பிரம்மப் பிரயத்தனமாயிருக்கும்.

இன்னும் சில சமயம் வஜ்ரபாகு வாதாபி சைன்யத்தின் படையெடுப்பைப் பற்றியும், பல்லவ ராஜ்யத்துக்கு வந்திருக்கும் பேரபாயத்தைப் பற்றியும் பேசுவான். அப்போதெல்லாம் அவனுடைய தொனியில் கவலை நிறைந்திருக்கும்.

அமைதி குடிகொண்ட அழகிய கிராமங்களின் ஓரமாகப் போகும்போதெல்லாம் வஜ்ரபாகு, "ஆஹா! இந்த கிராமங்களுக்கெல்லாம் கொஞ்ச நாளில் என்ன கதி நேரப் போகிறதோ, தெரியவில்லையே!" என்பான்.

நீண்ட கிளைகளை நாலாபுறமும் பரப்பிக் குளிர்ந்த நிழல் தந்து நின்ற

எளிய வாழ்வுக்கும் உயரிய சிந்தனைக்கும் ராஜாஜி உதாரண புருஷராக விளங்குகிறார்.

இந்த இரண்டு அம்சங்களையும் அவருடைய தமிழ் நடையிலும் காண்கிறோம்.

எளிமை என்றால், இதைவிட எளிமையாகத் தமிழ் எழுதவே முடியாது என்று சொல்லலாம். ஆனால், நடை எவ்வளவுக்கு எளியதோ, அவ்வளவுக்கு ராஜாஜி எழுதும் விஷயங்கள் உயர்வானவை.

இன்னும் ராஜாஜியிடம் நாம் காணும் ஒப்பற்ற தூய்மை, ஒழுக்கம், கட்டுப்பாடு, வினைத்திட்பம் ஆகியவற்றையும் அவருடைய தமிழ் நடையில் காண்கிறோம்.

ராஜாஜியின் நடையில் ஒரு பிழையை நாம் காண முடியாது. சந்தர்ப்பத்துக்குப் பொருந்தாத ஒரு வார்த்தையை நாம் பார்க்க முடியாது. ஒரு வார்த்தையை எடுத்து விட்டு இன்னொரு வார்த்தையைப் போட்டால் பொருந்தாது.

ராஜாஜியின் நடை பேச்சு நடைதான்; ஆனால் இலக்கண வரம்புக் குட்பட்டது. அதில் தடபுடலும் படாடோபமும் கிடையாது; ஆனால் அழகும் அமைதியும் உண்டு.

இதெல்லாவற்றையும் விட முக்கியமாக, ராஜாஜியின் பெயர் பெற்ற அறிவுத் தெளிவையும் அவரது நடையில் காண்கிறோம். எப்பேர்ப்பட்ட சிக்கலான விஷயத்தையும் சிக்கெடுத்து மிகச் சாதாரண அறிவுள்ளவர்களுக்கும் தெரியும்படி தெளிவாக்கிவிடும் அதிசய சக்தியை அவருடைய எழுத்திலேயும் பார்க்கிறோம்.

மலைச் சுனையில் உற்பத்தியாகிப் பாறைக் கற்களின் மீதும் கூழாங்கற்களின் மீதும் சலசலவென்று சப்தித்துக் கொண்டு ஓடும் பளிங்கு போன்ற தூய்மையான ஓடை நீரில் எத்தகைய தெளிவை நாம் காண்கிறோமோ, அத்தகைய தெளிவை ராஜாஜியின் தமிழ் நடையில் காண்கிறோம்.

குற்றாலம், பாபநாசம் முதலிய மலைகளில் தெளிந்த நீரருவி ஆடிக் கொண்டும் பாடிக் கொண்டும் வரும்போது நடுவில் சில இடங்களில் ஆழமான சுனைகளில் விழுந்தும் வருவதுண்டு. அந்தச் சுனைகளில் கழுத்து அளவு ஆழமும், அதைவிட அதிகமான ஆழமுங்கூடச் சில இடங்களில் இருப்பதுண்டு. ஆனால் சுனையில் குனிந்து பார்த்தோமானால், அவ்வளவு ஆழத்தின் அடியில் கிடக்கும் கூழாங் கற்களும் சிற் கற்களும் நன்கு புலனாகும். கண்ணாடியில் பார்ப்பது போல் அவற்றைப் பார்ப்போம். அப்படியேதான் ராஜாஜியின் கட்டுரைகளைப் படித்துக் கொண்டே போகும்போது சில சமயம் மிகவும் ஆழ்ந்த கருத்துக்களடைந்த பகுதிகளுக்கு வருகிறோம். ஆனால் அந்த ஆழத்தில் நாம் அமிழ்ந்து விடுவதில்லை; ஆழத்தைக் கண்டு நாம் பயந்து விடுவதுமில்லை. அந்த ஆழத்தின் அடியிலுள்ள முத்துக்களையும் ரத்தினங்களையும் தெளிவாகக் கண்டு அதிசயிக்கிறோம்.

சிலர் தொட்டதெல்லாம் பொன்னாகும் என்று உபசாரத்துக்குச் சொல்வதுண்டு. ராஜாஜி தொட்டதெல்லாம் தெளிவாகிற தென்று நிச்சயமாகச் சொல்லலாம்.

நவீன விஞ்ஞான சாஸ்திரங்களை எப்படித் தெளிவாகத் தமிழில் சொல்லலாம் என்பதற்கு இரண்டாவது கட்டுரை மலரிலுள்ள தேனீ, மனிதன் எம்மாத்திரம், உணவு சாஸ்திரம், வெப்பத்திலும் தண்மை, விசுவரூப தரிசனம் ஆகிய கட்டுரைகள் சிறந்த எடுத்துக் காட்டுகளாயிருக்கின்றன.

ஆங்கிலத்தில் 'கல்ச்சர்' என்று சொல்வதற்குத் தமிழில் ஒரு பிரதி பதம் வேண்டுமென்று சில தமிழன்பர்கள் வெகுகாலம் முயன்று, "பண்பாடு" என்னும் வார்த்தையைக் கண்டு பிடித்தார்கள். இதைத் தலைப்பாக வைத்துக்கொண்டு ராஜாஜி எழுதியிருக்கும் கட்டுரையைத் தமிழர் முன்னேற்றத்தில் அக்கறையுள்ளவர்கள் எல்லாரும் பன்முறை பாராயணம் செய்ய வேண்டும். கிராமச் சாவடிகளில் ஊர் ஜனங்களைக் கூட்டிப் படித்துக் காட்ட வேண்டும்.

இன்னும் தமிழர் வாழ்வையும், முன்னேற்றத்தையும் பற்றிய ராஜாஜியின் அரிய கருத்துக்கள் இந்நூலில் திரட்டித் தரப்பட்டிருப்பதைக் காண்கிறோம்.

சமூகத்தையே உயர்த்தக் கூடிய தமிழ் நூல்களிலே, தெய்வத் திருக்குறளுக்கு அடுத்தபடியாகப் போற்றப்பட வேண்டிய நூல் ஒன்று உண்டு என்றால், அது இதுதான் என்பதில் ஐயமில்லை.

ராஜாஜியின் கட்டுரைகளையும் கதைகளையும் திரட்டித் தமிழ் நாட்டுக்கு இரண்டு அழகிய புத்தகங்களைத் தந்திருக்கும் புதுமைப் பதிப்பகத்தார் பாக்கியசாலிகள் என்பதிலும் சந்தேகமில்லை.

போகிறது?" என்று தோன்றி விடுகிறதா?

ராஜாஜி அப்படியெல்லாம் நம்மைப் பயமுறுத்துவதில்லை. சின்னஞ்சிறு பிள்ளைகள் கூடப் படிக்க ஆசை கொள்ளும் முறையிலே கதையைத் தொடங்குகிறார். அப்புறம் கதையின் சுவாரஸ்யத்திலே தங்கு தடையில்லாமல் நம்மை இழுத்துக் கொண்டே போகிறார். கதையை முடிக்கும் போது, "இத்தனை நேரமும் நாம் கதை படித்தோமா, வேதமந்திரம் படித்தோமா?" என்று திகைக்கும்படி செய்து விடுகிறார்.



உதாரணமாக, முகுந்தன் கதை எப்படி ஆரம்பமாகிறதென்று பாருங்கள்:—

**"சிறுவர்களும் குரங்குகளும் சேர்ந்து விட்டால் விளையாட்டுக்கு என்ன குறைவு? வேலம்பட்டிப் புளியந் தோப்பில் ஊர்ப் பையன்கள் எல்லாம் சேர்ந்து மரத்தில் ஏறியும் குதித்தும் கூக்குரலிட்டும் குரங்குகளை விரட்டிக் கொண்டும் விளையாடுகிறார்கள்....."**

முகுந்தன் கதை எப்படி முடிகிறதென்று இப்போது பார்க்கலாம்:—

**"அதுமுதல் முகுந்தன் ஊருக்குப் பறையனாய்ப் போனான். அவன் மனம் சாந்தி யடைந்தது."**

முகுந்தனுக்கு என்னமோ மனம் சாந்தி யடைந்துவிட்டது. ஆனால் அவன் கதையைப் படித்த நமக்கு மனச் சாந்தி ஏற்படுவதில்லை. வேலம்பட்டிப் புளியந்தோப்பும் கமலாபுரம் ஆஸ்பத்திரியும் ஊர்ச் சிறுவர்களும் தோப்புக் குரங்குகளும் மாரியும் சின்னானும் சேதம்மாளும் சீதா கலோகமும் முகுந்தனுடைய பூர்வ ஜன்ம நினைவுகளும் நம்முடைய மனதில் குடிகொண்டு என்னவெல்லாமோ சிந்தனைகளை உண்டாக்கிக் கொண்டிருக்கின்றன. வெகுகாலம் வரையில் கதையில் வரும் பாத்திரங்களையும் சம்பவங்களையும் நம்மால் மறக்க முடிவதில்லை.

"திக்கற்ற பார்வதி" என்னும் கதை முடியும் விதத்தைப் பாருங்கள்:—

**"அப்புறம், முடிவில்லாத மௌனக் கடலில் மூழ்கிப் போனான். திக்கற்ற பார்வதியின் உயிர் துயரக் கூட்டினின்றும் தப்பிப் பறந்து சென்றது."**

"தேவானை" கதையை நாம் படித்து முடித்து விடுகிறோம். ஆனால் முடிக்கும் போது நம் மனதில் தோன்றும் காட்சியை என்றைக்கேனும் மறக்க முடியுமா?

**"பிறகு பல நாள் வரையில் இராமநாதய்யர் கடை, ரயில்வே ஸ்டேஷன், சினிமா எங்கேயும் பார்த்துக் கொண்டிருப்பார். ஆனால் அந்தப் பிச்சைக்காரியை மட்டும் அவர் காணவேயில்லை. அவள் என்ன ஆனாளோ, யாருக்குத் தெரியும்?"**

பிச்சைக்காரியை இராமநாதய்யர் தேடுகிறார். நாமோ இராமநாதய்யரைத் தேடுகிறோம். கடை, ரயில்வே ஸ்டேஷன், அல்லது சினிமாக் கொட்டகையில் எங்கேயாவது இராமநாதய்யர் நின்றுகொண்டிருக்கிறாரா என்று பார்க்கிறோம்.

* * *

ஒருவருடைய கையெழுத்தைப் பார்த்து அவருடைய குணங்களைக் கண்டுபிடிக்கலாம் என்று சொல்வார்கள். இதன் உண்மை எப்படியானாலும், ஒரு நூலாசிரியர் எழுதும் கதையில் அவருடைய குணங்கள் பிரதிபலிக்கின்றன என்பதில் ஐயமில்லை. இதை ராஜாஜியின் கதையில் நன்கு காணலாம்.

"வாழ்க்கை முறையில் எளிமையும் சிந்தனையில் உயர்வும்" உடையவர்களே உலகில் மகான்கள் என்று போற்றப் படுகிறார்கள்.

# ராஜாஜி மலர்

ரா. கி.

**(1) கதைகள் (2) கட்டுரைகள்**

[ஆசிரியர்: சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார்; பிரசுரம்: புதுமைப் பதிப்பகம், காரைக்குடி; விலை: ரூபாய் மூன்று; ரூபாய் நாலரை.]

கதைகளில் எத்தனையோவகைக் கதைகள் இருக்கின்றன. அராபியக் கதை, அத்தைப் பாட்டிக் கதை, விக்ரமாதித்யன் கதை, மதனகாமராஜன் கதை, தற்காலத்து நவீனச் சிறு கதைகள் — எல்லாம் இருக்கின்றன. உபநிஷதங்களிலும், பைபிளிலும் கூடக் கதைகள் இருக்கின்றன.

ராஜாஜியின் கதைகள், உபநிஷதக் கதைகளோடு சேர்க்கப்பட வேண்டியவை.

கட்டுரைகளில் எத்தனையோ வகைகள் உண்டு. ஒரு தடவை படித்து விட்டு எறிய வேண்டியவை, இரண்டு மூன்று தடவைகள் படித்துச் சிந்தித்துப் பயன்பெற வேண்டியவை, படிக்காமலே விருந்தால் க்ஷேமம் என்ற இனத்தில் சேர்ந்தவை — இப்படிப் பலவகைக் கட்டுரைகள் உண்டு.

பகவத் கீதையைப் போல் தினம் பக்தியுடன் பாராயணம் செய்ய வேண்டிய கட்டுரைகளும் உண்டு.

இந்தக் கடைசி வகையைச் சேர்ந்தவை ராஜாஜியின் கட்டுரைகள்.

சென்ற ஐம்பதாண்டு காலத்தில் தமிழ் மொழியிலே எத்தனை எத்தனையோ வசன நூல்கள், கவிதை நூல்கள் — பதினாயிரம் லட்சம் என்ற கணக்கில் — வெளியாகியிருக்கின்றன.

இவ்வளவு நூல்களிலே இன்னும் நூறு வருஷத்துக்குப் பிறகு வரும் தமிழர் சந்ததிகள் படிக்கக்கூடிய நூல்கள் எவையென்று கேட்டால், பாரதியாரின் கவிதைகளும், ராஜாஜியின் கதைகள் — கட்டுரைகளும்தான் என்பதில் எள்ளளவும் ஐயமில்லை.

உபநிஷதத்தில் சொல்லப்படும் சத்தியகாம ஜாபாலன் என்னும் சிறுவனின் கதை வேத காலத்திய கதையேயாகும். ஆனாலும் அந்தக் கதையில் உள்ள தத்துவம் இந்தக் காலத்துக்கும் எந்தக் காலத்துக்கும் பொருத்தமானபடியால், மேற்படி உபநிஷதக் கதையை இன்றைக்கும் படிக்கிறோம்; படித்து வியக்கிறோம்; அநுபவிக்கிறோம்; ஆனந்திக்கிறோம்.

அவ்விதமேதான் முருக்தன் கதையையும், கூனிசுந்தரி கதையையும், ஜகதீச சாஸ்திரிகளின் கதையையும் நமக்குப் பிற்காலத்தில் எத்தனையோ வருஷங்களுக்குப் பிறகு வரும் சந்ததிகள் படித்து அதிசயித்து ஆனந்திப்பார்கள்.

ஏனெனில், இந்தக் கதைகளில் வரும் பாத்திரங்கள் நம் காலத்து ஸ்திரீகள் புருஷர்களேயானாலும், அவர்களைக் கொண்டு விளக்கப்படும் உண்மைத் தத்துவம் முக்காலத்துக்கும் பொதுவானது; சாசுவதமானது; அழிவில்லாதது.

உண்மைத் தத்துவத்தை விளக்கும் காரணத்தினாலே, கதையின் ஓட்டமும் சுவையும் குறைந்து விடுகின்றனவா? படிக்க ஆரம்பிக்கும்போதே, "இதெல்லாம் பெரிய விஷயங்கள்; நமக்கு எங்கே விளங்கப்

# அபாயகரமான பிரயாணம், ஜாக்கிரதை!

இந்த அறிக்கையை புறக்கணிப்பதால் உங்கள் உயிரையே இழக்கவும் கூடும். இன்று ரயில் வண்டிகளில் ஜன நெருக்கடி அதிகமாக இருப்பதால், சில சமயங்களில் வண்டிக்குள் புகவே முடியாமலிருக்கலாம். ஆனால் ஏறும் படிமீது நின்று வண்டிக்கு வெளியே தொங்கிக்கொண்டு பிரயாணம் செய்யாதீர்கள். அது சட்டவிரோதமானது மட்டுமல்ல, நீங்கள் கீழே விழுந்து காயமடையவும் நேரிடலாம், உயிரை இழப்பதற்கும் ஏதுவாகும். ரயில் வண்டித் தொடருக்கும், ரயில் கணவாய் கவர்கள் அல்லது கைகாட்டி மரக் கம்பங்களுக்கு மிடையேயுள்ள இடம் மிகக் குறுகியது. ரயில் வண்டி வேகமாகப் போய்க்கொண்டிருக்கையில் உங்கள் உடல் அவற்றிலொன்றின் மீது மோதிவிடும். அப்பிரயாணமே உங்களது கடைசி பிரயாணமாகிவிடும்! புத்திசாலித்தனமான காரியத்தைச் செய்யுங்கள். வண்டியில் இடமில்லாவிடில் ஸ்டேஷனிலேயே தங்கிவிடுங்கள். வீணாக உயிருக்குக் கேடு தேடாதீர்கள். பிரயாணமே செய்ய முடியாவிட்டாலும்கூட, நாடு முழுவதுக்கும் உணவுப் பொருள்கள், துணிமணிகள், விறகு முதலியவை ஏற்றிச் செல்வதே ரயில்வேக்களின் முக்கிய வேலை என்பதை ஞாபகத்தில் வைத்துக்கொள்ளுங்கள்.



## பிரயாணத்தைக் குறையுங்கள்.

அபாயகரமாக பிரயாணம் செய்யாதீர்கள்.

AAA 68 — TM.



## அன்னை கஸ்தூரிபாய் ஞாபகார்த்த நிதிக்காக



### ஸ்ரீமதி M. S. சுப்புலக்ஷ்மியின்
இன்னிசைக் கச்சேரி

*மயிலாப்பூர்*

### பி. எஸ். ஹைஸ்கூல் ஹாலில்
### ஞாயிறு 30 - 7 - 1944 மாலை 5 - 30 மணிக்கு

டிக்கெட் விவரங்கள்: ரூ. 25, ரூ. 10, ரூ. 5 & ரூ. 2.

உங்களுடைய இடத்தை முன்னதாகவே ரிசர்வ் செய்து கொள்ளுங்கள். அன்னை கஸ்தூரிபாயின் ஞாபகார்த்த நிதிக்குத் தங்கள் கைங்கர்யத்தை தாராளமாகச் செய்யுங்கள்.

டிக்கெட்டுகள் கீழ்க்கண்ட இடங்களில் கிடைக்கும்

1. ஹிந்து ஆபீஸ், மவுண்டு ரோடு.
2. கல்கி ஆபீஸ், கீழ்ப்பாக்கம்.
3. மெஸர்ஸ். ராம்லால் & கோ., இந்தியன் பாங்க் பில்டிங்ஸ், முதல் லைன் பீச், மதராஸ்.
4. டாக்டர் அண்ணங்கராச்சாரியார் 8, சர் மகமது உஸ்மான் ரோடு, தியாகராயநகர், மதராஸ்.
5. ராவ்பகதூர் கே. வி. கிருஷ்ணசாமி அய்யர், 6, வடக்கு மாட வீதி, மயிலாப்பூர், மதராஸ்.
6. மெஸர்ஸ். புஷ்பவனம் ஸ்டோர்ஸ், பைக்ராப்ட்ஸ் ரோடு, திருவல்லிக்கேணி, மதராஸ்.

*லா. நா. கோபாலசாமி,*
செக்ரடரி.

# ஆகாச வெடி

"வைஸ்ராய் நிர்வாக சபை மெம்பர் ஸர் மூஹம்மது உஸ்மான் நேற்று ஒரு முக்கிய விஷயமாகச் சென்னைக்கு வந்து சேர்ந்தார். ஸ்டேஷனில் அவரைப் பலர் வரவேற்றனர்."

—ஒரு செய்தி.

ரயில்களில் ஒரே இடநெருக்கடியா யிருக்கும் இந்தக் காலத்தில் ஸர் உஸ்மானைப் போன்றவர்கள் வருவதென்றால் முக்கியமான காரணம் இருக்கத்தான் வேண்டும்!

★

"ஹிட்லரின் புது ஆயுதமான ஆளில்லா விமானத்துக்கு, ஒரு குண்டுக்கு ஒருவரே பலியாகி யிருக்கிறார்கள். வந்த குண்டுகள் 2754. பலியானவர் 2752" என்று சர்ச்சில் கூறுகிறார்.

—ஒரு செய்தி.

இந்தக் கணக்குப்படி மேற்படி குண்டுக்குத் தப்பித்துக் கொண்ட பாக்கி இரண்டு பேருடைய சாமர்த்தியத்தைப் பாராட்டுகிறோம்.

★

"எம்பிரஸ் மில்லுக்குச் சொந்தமான ஒரு கிடங்கை ஒரு மின்னல் தாக்கிய தால் அதிலிருந்த 4 லக்ஷம் ரூபாய் பெறுமான பஞ்சு தீப்பிடித்து நாசமாயிற்று."

—ஒரு செய்தி.

எம்பிரஸ் மில்லுக்கு மின்னல்போல் வந்த இந்தக் கஷ்டம் சீக்கிரமே பஞ்சாய்ப் பறந்து போகவேண்டுமென்று பிரார்த்திக்கிறோம்.

★

"சென்ட்ரல் ஸ்டேஷன் கூரை மீதுள்ள சுயத் தகடுகளைப் பிய்த்துக் கொண்டிருந்ததாக ஒருவன் குற்றம் சாட்டப்பட்டான். பல பிரயாணிகள் அதைப் பார்த்தார்களாம்."

—சென்னைச் செய்தி.



தகடுகளைப் பிய்க்கவில்லை என்று அவன் கூரைமீது நின்று சத்தியம் செய்த போதிலும் குற்றம் குற்றமே!

தேச விடுதலைதான் அவருடைய இலட்சியம்.

தேச விடுதலைக்கு ஒரு பெரிய முட்டுக் கட்டையை நீக்குவதுதான் அவருடைய முயற்சி.

அந்த முட்டுக் கட்டையைப் போடுகிறவர் ஜனாப் ஜின்னா.

ஒன்று, ஜின்னாவையும் வழிக்குத் திருப்ப வேண்டும்; அல்லது ஜின்னாவுக்கு முட்டுக் கட்டை போடும் சக்தி இல்லாமல் செய்ய வேண்டும்.

ஜின்னாவுக்கு மேற்படி சக்தி எவ்விதம் ஏற்படுகிறது? அந்த சக்தியை அளிப்பவர்கள் யார்? — முஸ்லிம் மக்கள்.

''பாகிஸ்தான்'' அல்லது சுய நிர்ணயக் கோரிக்கையை முஸ்லிம் மக்களுக்கு மறுத்துக் கொண்டிருக்கும் வரையில் அவர்கள் ஜின்னாவுக்குத்தான் ஆதரவு அளித்துக்கொண்டிருப்பார்கள்.

இதை யறிந்துதான், ஜின்னாவுக்கு விரோதமான பஞ்சாப் யூனியனிஸ்ட் முஸ்லிம்கள் கூட ''நாங்களும் பாகிஸ்தான் வேண்டுகிறோம்'' என்பதைத் தங்கள் கட்சியின் முதல் கொள்கையாக வெளியிட்டிருக்கிறார்கள்.

எனவே, முஸ்லிம்களின் சுய நிர்ணய உரிமையைக் காங்கிரஸ் ஒப்புக்கொண்டு விட்டால், அப்புறம் ஜின்னாவின் முட்டுக் கட்டை சக்தியும் சின்னா பின்னமாகும்.

பிறகு. அவர் காங்கிரஸின் சுதந்திரக் கோரிக்கையை ஆதரிக்கா விட்டால், முஸ்லிம் மக்கள் அவருடைய உண்மை சொரூபத்தை அறிவார்கள். அவரைத் தள்ளிவிட்டு உண்மையான சுதந்திர முஸ்லிம் தலைவரைத் தேர்ந்தெடுப்பார்கள்.

இதையெல்லாம் வேறு யாரையும் காட்டிலும் ஜனாப் ஜின்னாவே நன்கு உணர்ந்திருக்கிறார்.

ஆகையினால்தான், ராஜாஜி திட்டத்தைப் பற்றி அவர் வாய் திறக்க முடியாமல் விழித்துக்கொண்டிருக்கிறார்.

''திட்டம் எப்படி?'' என்றால், ''காரியக் கமிட்டியைக் கலக்கிறேன்'' என்கிறார்.

''காரியக் கமிட்டியைக் கலந்து பிறகு முடிவாகச் சொல்லுங்கள்! உங்களுடைய அபிப்பிராயம் என்ன?'' என்று கேட்டால், வாயை இறுக மூடிக் கொள்கிறார்.

இப்படிப்பட்ட சங்கடமான நிலைமையில் ராஜாஜி ஜின்னாவை வைத்து விட்டார்!

நமக்கு வேண்டியது தேசத்தின் சுதந்திரம். தேசம் சுதந்திரம் அடைவதற்கு இன்றியமையாமல் வேண்டியிருப்பது முஸ்லிம் மக்களின் ஒத்துழைப்பு.

ஜின்னாவுடன் சேர்ந்து அந்த ஒத்துழைப்பு வந்தால் நமக்குச் சந்தோஷம்; ஜின்னா இல்லாமல் முஸ்லிம்களின் ஒத்துழைப்புக் கிடைத்தாலும் சந்தோஷம்தான்.

*

## வாழ்த்துகிறோம்

இரண்டு வருஷத்துக்கு முன்னால் இந்த ராஜாஜி திட்டம் ஒப்புக்கொள்ளப் பட்டிருந்தால், எளிதில் காரியம் கைகூடியிருக்கும்.

அதற்குத் தேசம் கொடுத்து வைக்கவில்லை.

ஆனாலும், எவ்வளவோ கடுமையான எதிர்ப்புகளுக்கும் குருட்டு எதிர்ப்புகளுக்கும் வஞ்சக எதிர்ப்புகளுக்கும் ஈடுகொடுத்து, தாம் உண்மையென்று கண்ட திட்டத்தைக் கைவிடாமலிருந்து அதற்குக் காந்திஜியின் அங்கீகாரத்தைப் பெற்ற ராஜாஜியின் செயல் திறமையை வாழ்த்துகிறோம்.

அவருடைய தீர்க்க திருஷ்டியைப் போற்றுகிறோம்.

அவருடைய பொறுமையையும் சாந்தத்தையும் பதின்மடங்கு போற்றுகிறோம்.

மகா மகா பெரிய மனிதர்கள் முதல், அற்பப் பத்திரிகைகள் வரையில் ராஜாஜியை இடைவிடாமல் தாக்கி வந்தும், ''மகாத்மா என்னுடைய திட்டத்தை ஆதரிக்கிறார்'' என்ற விஷயத்தை அவர் இதுகாறும் வெளியிடவில்லை. மகாத்மாஜியின் உபவாசத்தின்போதே இத் திட்டத்திற்கு அவருடைய சம்மதம் பெற்றிருந்தும், காந்திஜி சிறையிலிருக்கும்போது அதை வெளியிட்டு ராஜாஜி தமக்கு ஆதரவு தேடவில்லை.

தேசத்தின் நன்மையைத் தவிர தமது சொந்தப் பெயரைக் காப்பாற்றிக் கொள்ளும் எண்ணம் ராஜாஜிக்குக் கொஞ்சமும் இல்லையென்று இதிலிருந்து வெளியாகிறது.

அத்தகைய அவருடைய தன்னடக்கத்தை நூறுமடங்கு பாராட்டுகிறோம்.

---

ஐந்து ரூபாய் பரிசு: சென்ற இதழில் வெளியான ''மனச் சாட்சி!'' என்னும் காலக்ஷேபத் துணுக்குக்குப் பரிசு பெற்றவர்: அ. சேதுராமன், தாலுக்கா ஆபீஸ், ஆத்தூர்.

இந்தியா பிரிட்டிஷ் பிடியிலிருந்து விடுபட்டுப் பூரண சுதந்திரம் அடைவதுதான் திட்டத்தின் முக்கிய நோக்கம். அந்த நோக்கம் நிறைவேறிய பிறகுதான், பிரிவினை நிபந்தனைகள் அமுலுக்கு வரும்.

## கட்டாயப் பிரிவினையா?

இந்தியாவை எல்லாத் துறைகளிலும் அமுக்கிக்கொண்டிருக்கும் அன்னிய ஆட்சியிலிருந்து விடுபடுவதற்காக என்ன தியாகம் வேண்டுமானாலும் செய்யலாம் என்பது நமது நம்பிக்கை.

ஐரோப்பாவில் ஏறக்குறைய இந்தியா அளவுள்ள ஐரோப்பியப் பிரதேசத்தில் இருபத்து நான்கு சுதந்திர தேசங்கள் இருக்கின்றன. அந்நாடுகள் எல்லாம் சுதந்திரத்தைப் பறிகொடுத்து விட்டு ஹிட்லர் ஆட்சியிலோ, பிரிட்டிஷ் ஆட்சியிலோ ஒற்றுமைப் பட்டிருப்பதாகச் சொல்லவில்லை.

ஆகவே, இந்தியா பூரண சுதந்திரம் அடைவதாயிருந்தால், தேசம் பிரிக்கப்பட்டாலும் பாதகமில்லை என்று நாம் கருதுகிறோம்.

ஆனால் ராஜாஜி—காந்திஜி திட்டத்தின்படி தேசம் கட்டாயம் பிளக்கப்பட்டுத்தான் தீருமா?

மேற்படி திட்டம் முஸ்லிம் லீக்கினால் ஒப்புக் கொள்ளப்பட்டு, காங்கிரஸ்-லீக் கூட்டு முயற்சியினால் இந்தியா பூரண சுதந்திரம் அடைந்து விடுவதாக வைத்துக் கொள்வோம்.

அப்போது தேசத்தைக் கட்டாயமாகப் பிளந்துதான் ஆகவேண்டுமா?

கிடையவே கிடையாது.

மேற்படி திட்டத்தில் தேசத்தைப் பிரிப்பதற்கு இன்னொரு முக்கிய நிபந்தனை இருக்கிறது.

எந்தப் பிரதேசத்தைப் பிரிக்க வேண்டுமென்று சொல்கிறார்களோ, அந்தப் பிரதேசத்தில் வோட்டு எடுக்க வேண்டும்; முஸ்லிம்களிடம் மட்டுமல்ல, சகல ஜனங்களிடமும் வோட்டு எடுக்கவேண்டும்.

பிரிப்பதற்குச் சாதகமாகப் பெரும்பான்மை வோட்டுக் கிடைத்தால்தான் பிரிக்கலாம்.

அவ்வாறு பிரிவினைக்குச் சாதகமான பொதுஜன வோட்டு ஒருநாளும் கிடைக்காது என்பது நமது நம்பிக்கை.

இஷ்டப்பட்டால் பிரிந்து போகும் சுயநிர்ணய உரிமையை முஸ்லிம்களுக்கு மறுக்கும் வரையிலேதான் அதில் அவர்களுக்கு ஆசை இருக்கும். உரிமையைக் கொடுத்துவிட்டால் ஒருநாளும் அவர்கள் பிரிந்து போக விரும்பமாட்டார்கள்.

ஏனெனில், பிரிந்து போவதில் அவர்களுக்கு லாபம் இல்லை; எவ்வளவோ கஷ்டமும் நஷ்டமும் இருக்கின்றன.

வோட்டு எடுக்கும் காலத்தில், பிரிவினையால் நேரக்கூடிய கஷ்ட நஷ்டங்களை யெல்லாம் எடுத்துக் காட்டிப் பிரசாரம் செய்யும் உரிமை மேற்படி திட்டத்தின் மூன்றாவது நிபந்தனையின்படி தேசிய வாதிகளுக்கு உண்டு.

எனவே, தேசம் பிரிக்கப்படுவதென்பது 100-க்கு 99 பங்கு நடக்காத காரியம் என்று நிச்சயம் சொல்லலாம்.

ஸோவியத் ருஷியாவில் அடங்கியுள்ள பிரதேசங்கள் வேண்டும் போது தனியே பிரிந்து போக உரிமை பெற்றிருக்கின்றன.

ஸோவியத் அரசியல் அமைப்பிலேயே மேற்படி உரிமை அங்கீகரிக்கப்பட்டிருக்கிறது.

ஆனால் உரிமை கிடைத்து இருபது வருஷத்துக்கு மேலாகியும் நானது வரையில் ஒரு பிரதேசமாவது பிரிந்து போகவில்லை.

இந்தியாவிலும் அப்படித்தான் நடக்கும் என்பதில் சந்தேகமே இல்லை.

* * *

## ஜின்னா விழிக்கிறார்!

கோணல் புத்தியுடன் குறை சொல்கிறவர்கள் இன்னும் சிலர் தேசத்தில் இருக்கிறார்கள்.

"என்ன பிரயோஜனம்? ஜின்னாதான் ஒப்புக்கொள்ளவில்லையே?" என்றும், "நன்றாய் வேண்டும் இந்த ராஜாஜிக்கு! ஜின்னாவைச் சரிக்கட்டப் பார்ப்பது எவ்வளவு புத்தியில்லாத காரியம் என்று இப்போதாவது தெரிந்ததா?" என்றும் சில பிரமுகர்கள் திருவாய்மலர்ந்திருக்கிறார்கள்.

எப்படியாவது ஜின்னாவைச் சரிக்கட்டிச் சிநேகம் செய்து கொள்வதையே ராஜாஜி தமது ஜீவிய இலட்சியமாகக் கொண்டிருக்கும் பட்சத்தில், இத்திட்டத்தை ஜின்னா ஒப்புக் கொள்ளாதது ராஜாஜிக்குத் தோல்விதான். — ஏன்? காந்திஜிக்கும் தோல்விதான்!

ஆனால் ராஜாஜியின் வாழ்க்கை இலட்சியம் அதுவல்ல.

# நல்ல காந்தி இவர்!

நல்ல மகாத்மா இவர்!

காந்தி மகாத்மா இவ்வாறு செய்யலாமா?

இப்படி ஒரு பெரிய கல்லைத் தூக்கிப் போடலாமா?

தேசத்தைப் பிளப்பதற்குச் சம்மதிக்கலாமா?

அதுவும், மூன்று பிளவாக்கச் சம்மதம் கொடுக்கலாமா?

அதிலும், ராஜாஜி சொன்னதை ஒப்புக்கொள்ளலாமா?

ஆகா! என்ன காரியம் செய்து விட்டார் இந்த மகாத்மா காந்தி!

*  *  *

## பழைய கதை

முஸ்லிம் லீக்கின் சுயநிர்ணயக் கோரிக்கையை ஒப்புக்கொண்டாவது முஸ்லிம்களுடன் ராஜி செய்து கொள்ள வேண்டும் என்று இரண்டு வருஷத்துக்கு முன்பு ராஜாஜி சொன்னார். அதைக் காங்கிரஸ் கமிட்டி ஒப்புக்கொள்ளாதபடியால் ராஜாஜி காங்கிரஸை விட்டு வெளிவர நேர்ந்தது.

இதன் காரணமாக, நாட்டில் இரண்டு கூட்டத்தார் ராஜாஜியைப் பலமாகக் கண்டித்தார்கள். முதல் கூட்டத்தார் காந்தியிடமும் காங்கிரஸிடமும் உண்மையான பக்தியுள்ள சாதுக்கள். அவர்களுக்கு ராஜாஜியிடமும் மரியாதை உண்டு. ஆனால் காந்திஜிக்கும் காங்கிரஸுக்கும் முரண்பட்டு ராஜாஜி நடந்து கொண்டது அவர்களுக்குப் பிடிக்கவில்லை. அவருடைய காரியத்தை அவர்கள் கண்டித்ததுடன், "ஐயோ! இந்த ராஜாஜி இப்படி காந்திஜியையும் காங்கிரஸையும் விட்டுப் பிரியும்படி நேர்ந்து விட்டதே!" என்று உண்மையாக வருத்தப்பட்டார்கள்.

ராஜாஜியைக் கண்டித்து அவரைத் தாக்குவதையே தொழிலாக வைத்துக் கொண்டிருந்த இன்னொரு கூட்டத்தார் பொய் வேஷதாரிகள்; போலி காந்தி பக்தர்கள். தேச பக்தியையும் காந்தி பக்தியையும் போர்வையாக வைத்துக் கொண்டு ஊரைக் கொள்ளை யடிக்கும் ருத்திராட்சப் பூனைகள்.

இராமாயணத்தில் சூர்ப்பணகை சுந்தர வடிவம் பூண்டு இராமனிடம் வருகிறாள். மாய வார்த்தைகள் பேசி இராமனை மயக்கப் பார்க்கிறாள். அந்தச் சமயம் சீதை அங்கு வந்து சேர்கிறாள். அவளைப் பார்த்ததும் சூர்ப்பணகைக்கு வியப்பும் அசூயையும் பொங்குகின்றன. அவளை இராமன் நிராகரிக்கும்படி செய்ய ஒரு யுக்தி பண்ணுகிறாள். ரொம்பவும் பயந்து நடுங்கியவள் போல் பாசாங்கு செய்து, இராமனை அணுகி நின்று, "அதோ வருகிறாளே, அவள் பார்ப்பதற்கு அழகியாகத் தோன்றுகிறாள்! ஆனால் உண்மையில் அவள் வஞ்சனை அரக்கி; மாய வேடம் பூண்டு உன்னை மயக்க வருகிறாள். ஐயோ! அந்த ராட்சஸியைக் கண்டால் எனக்குப் பயமாயிருக்கிறது. என்னைக் கொன்று தின்றாலும் தின்று விடுவாள்! இராமா! என்னைக் காப்பாற்று!" என்று உருக்கமாக வேண்டிக் கொள்கிறாள்.

அரசியல் உலகத்தில் இராமாயண சூர்ப்பணகையைப் போன்ற மாய வேஷ சூர்ப்பணகைகள் அநேகம் பேர் உண்டு. சூர்ப்பணகையாவது இராமனிடம் உண்மையான காதல் கொண்டிருந்தாள். இந்த அரசியல் சூர்ப்பணகைகளுக்கு மகாத்மாவிடம் அத்தகைய உண்மையான பக்தி கிடையாது. தங்களுடைய மோச வேலைகளை மறைத்து மூடும் பொருட்டு அந்த காந்தி பக்தர்களாகவும் தேச பக்தர்களாகவும் நடிப்பவர்கள். அந்தப் பொய் நடிப்பின் ஒரு அம்சமாக இவர்கள் ராஜாஜியை ஓயாது தாக்கினார்கள்.

## அவமான அத்தியாயம்

ராஜாஜியைத் தாக்கும் விஷயத்தில் இவர்கள் காட்டிய உற்சாகத்துக்குக் கங்குகரை இல்லை. சொல்லத்தகாத வார்த்தைகளை யெல்லாம் சொன்னார்கள். "தேச மாதாவை வெட்டிப் பிளக்கப் பார்க்கிறார்!" என்றார்கள். "நாட்டைக் காட்டிக் கொடுத்து விட்டார்!" என்றார்கள் "காந்திக்குத் துரோகம் செய்து விட்டார்!" என்றார்கள். "பாதகம்" என்றார்கள். "பழி" என்றார்கள்.

மேற்படி வேஷதாரிகளுக்கு மனநிற்குன்னே "மகாத்மா சிறையிலேயே

இருக்க வேண்டும்" என்று விருப்பம். ஏனெனில் நாட்டில் பிரிட்டிஷ் ஆட்சி நடக்கும் வரையில்தான் இவர்களுக்கு க்ஷேமம். ஒரு வேளை ராஜாஜியின் திட்டம் நிறை வேறி விட்டால் என்ன செய்கிறது. தேசிய சர்க்கார் ஏற்பட்டு விட்டால் என்ன பண்ணுகிறது என்று இவர்களுக்குக் கதிகலக்கம். ஆகையினால்தான் அவர்கள் ராஜாஜியின் பேரில் அவ்வளவு கோபம் கொண்டு வரை துறை யில்லாமல் தாக்கி வந்தார்கள்.

நமது அரசியல் சரித்திரத்தில், மேற்கூறிய அத்தியாயமானது மிகவும் அவமானப் படத்தக்க ஓர் அத்தியாயமாகும். மேற்படி வஞ்சக துவேஷப் பிரசாரத்தினால் இந்தியப் பொது ஜனங்கள் — தமிழ் மக்களிலே கூட ஒரு பகுதியார் — ஏமாந்து போய், இந்தியாவின் சிறந்த அறிவாளியை — தமிழ்நாட்டின் தலை சிறந்த தியாகியை — தேச விரோதியாக நினைத்து நடத்தினார்கள் என்பதை நினைக்கும்போது,

"நெஞ்சு பொறுக்குதிலையே — இந்த
நிலைகெட்ட மனிதரை நினைந்துவிட்டால்"

என்று பாரதியாருடன் நாமும் சேர்ந்து வருந்தவேண்டியிருக்கிறது.

* * *

## ராஜாஜி—காந்தி திட்டம்

ராஜாஜி தயாரித்து, மகாத்மாவினால் ஒப்புக்கொள்ளப்பட்டு, ஜின்னாவுக்கு அனுப்பப்பட்ட சமரசத் திட்டம் என்ன சொல்கிறது என்று சற்றே பார்ப்போம். ஆறு நிபந்தனைகள் கொண்ட அத் திட்டம் வருமாறு :—

1. இந்தியாவின் சுதந்திரக் கோரிக்கையை முஸ்லிம் லீக் ஆதரிக்க வேண்டும். தாற்காலிகமாக தேசிய சர்க்காரை நியமிக்கும் விஷயத்தில் காங்கிரஸுடன் முஸ்லிம் லீக் ஒத்துழைக்க வேண்டும்.

2. யுத்தம் முடிந்த பிறகு இந்தியாவின் வட மேற்குப் பகுதியிலும் கிழக்கிலும் முஸ்லிம்கள் முழுப் பெரும்பான்மையாக இருக்கும் சேர்ந்தாற்போல் உள்ள ஜில்லாக்களின் எல்லையை நிர்ணயிக்க ஒரு கமிஷன் நியமிக்கப்படும்.

மேற்படி பிரதேசங்களிலுள்ள மக்கள் ஹிந்துஸ்தானத்தோடு சேர்ந்து இருப்பதா அல்லது தனியாகப் பிரிவதா என்பதைச் சர்வ ஜன வோட்டு எடுத்துத் தீர்மானித்துக் கொள்ள வேண்டும்.

3. சர்வ ஜன வோட்டு எடுக்கு முன்னர் எல்லாக் கட்சியினருக்கும் தங்கள் அபிப்பிராயத்தை எடுத்துச் சொல்லிப் பிரசாரம் செய்ய உரிமையுண்டு.

4. பிரிந்து போவது என்று தீர்மானமானால், இராணுவப் பாதுகாப்பு, வர்த்தகம், போக்குவரத்து முதலிய முக்கியமான பொது விஷயங்களைப் பாதுகாப்பதற்காகப் பரஸ்பர ஒப்பந்தம் செய்து கொள்ளப்படும்.

5. ஒரு பிரதேசத்திலுள்ள ஜனங்கள் தாங்களாகவே இஷ்டப்பட்டால்தான் அவர்களை இன்னொரு பிரதேசத்திற்கு மாற்றலாம்.

6. இந்திய ஆட்சியின் பூரண அதிகாரத்தையும் பொறுப்பையும் பிரிட்டன் இந்தியாவிடம் ஒப்புவிக்கும் போதுதான் மேற்சொன்ன திட்டங்கள் இரு சாராரையும் கட்டுப்படுத்தும்.

## சுதந்திர நிபந்தனை

மேற்படி ராஜாஜி - காந்திஜி திட்டத்தில் தேசத்தைப் பிரிக்கும் நிபந்தனை இருக்கத்தான் இருக்கிறது. முஸ்லிம் லீகின் 'பாகிஸ்தான்' கொள்கை அதில் ஒப்புக் கொள்ளப்பட்டிருக்கிறது. ஜின்னாவும் முஸ்லிம் லீகும் மேற்படி திட்டத்தை ஒப்புக்கொண்டு காங்கிரஸுடன் ஒத்துழைத்தால் அத் திட்டத்தின் பிரகாரம் யுத்தத்திற்குப் பிறகு இந்தியா தேசத்தை மூன்று பகுதிகளாகப் பிரிக்கும்படி நேரிடலாம். அவற்றின் இரண்டு பகுதிகள் முஸ்லிம்களின் பாகிஸ்தானாக இருக்கும்; மற்றப் பகுதி இந்தியாவாக இருக்கும்.

ஆகா! இப்படி தேசத்தைப் பிளக்கும்படியான திட்டத்தை மகாத்மா ஒப்புக்கொள்ளலாமா? எப்படி அவர் ஒப்புக் கொண்டார்?

ராஜாஜியின் திட்டம் அவ்வளவு பயங்கரமான, தேசத் துரோகமான, பாதகமான திட்டமாயிருந்தால் மகாத்மா ஒப்புக்கொள்வாரா?

அதுவும், தேசத்துக்காகப் பிராணத் தியாகம் செய்யத் தயாராயிருந்த காலத்தில் ஒப்புக்கொண்டிருப்பாரா?

எனவே, அது அவ்வளவு ஆட்சேபகரமான திட்டமல்லவென்று ஏற்படுகிறது.

உண்மையில், ராஜாஜியின் திட்டம் தேசத்தைப் பிளக்கும் திட்டமே அல்ல; அது, தேசத்துக்குச் சுதந்திரம் கொண்டுவரும் திட்டமாகும்.

மேற்படி திட்டத்தின் முதலாவது நிபந்தனையும் நாலாவது நிபந்தனையும் இதைத் தெளிவாக்குகின்றன.

கொண்டு நீங்கள் என்ன செய்யப் போகிறீர்கள்? அது எங்கள் பாங்கில் ஸ்டர்லிங்காகத்தான் இருந்து விட்டுப் போகட்டுமே!" என்றார்.

"பாங்கியில் பணமிருந்து வண்டி வாடகை கொடுக்கப் பணம் இல்லாத நிலைமையில் இருந்து என்ன பிரயோஜனம்? முதலில் 400 கோடி ஸ்டர்லிங்கையாவது கொடுங்கள். நாங்கள் பிழைத்துப் போகிறோம்" என்று இந்தியப் பிரதிநிதி கெஞ்சியும் அவர்கள் காதில் ஏறவில்லை.

குதிரை கீழே தள்ளியது மல்லாமல், குழியையும் பறித்ததாம் என்ற கதையாக, இந்தத் தீர்மானத்தை நிராகரித்தது மன்றி, இதை மகாநாட்டில் எப்படிக் கொண்டு வரலாம் என்று பார்லிமெண்டில் ஒரு மகானுபாவர் கேட்டிருக்கிறார்! எப்படியிருக்கிறது கதை!

"வரவேண்டிய கடன்தான் வராமல் போகட்டும்; ஏழை தேசங்களுக்குக் கடன் கொடுத்து உதவுவதும் சர்வதேச நிதியின் இரண்டாவதுநோக்கமல்லவா? அப்படியானால் அந்த உதவியை இந்தியாவுக்கும் அளிக்க வேண்டும்" என்ற பிரேரணையை ஸர் ஆர். கே. ஷண்முகம் செட்டியார் கொண்டு வந்தார். இதுவும் முதல் தீர்மானத்தின் கதியை அடைந்தது!

## ஹாஸ்ய கட்டம்

இவ்வளவு தூரம் இந்த மகாநாட்டின் கேலிக் கூத்து வெளியான பிறகு, இந்தியப் பிரதிநிதிகள் மகாநாட்டைப் பகிஷ்கரிக்க நினைத்திருந்ததாக நல்ல செய்தி வந்தது. நிஜமாகவே, அப்படிச் செய்திருந்தால் நமது சுயமரியாதையைக் காப்பாற்றிக் கொண்டிருக்கலாம். ஆனால், யாருடைய தூண்டுதலின் பேரிலேயோ, வற்புறுத்தலின் பேரிலேயோ, அத் தீர்மானங்களை வாபஸ் வாங்கிக் கொண்டு விட்டார்கள்!

பிரிட்டன்வுட்ஸ் சோக நாடகத்தில் மிகவும் ஹாஸ்யமான பாகம் கடைசியில்தான் வருகிறது. சர்வதேச டாலர் நிதி ஒன்று ஏற்படுத்தியிருக்கிறார்களே, அதற்குக் 'கோட்டா' பணம் செலுத்தும் பாக்கியம் ஆறு வல்லரசுகளுக்குக் கிடைத்திருக்கிறது. அந்த வல்லரசுகளில் பெரிய மனசு பண்ணி நம் ஏழை இந்தியாவையும் சேர்த்துக் கொண்டிருக்கிறார்கள். எவ்வளவு சந்தா தெரியுமோ? அதிகமாக ஒன்றும் இல்லை. 30 கோடிப் பவுன்தான்!

## மயிலை சங்கீத சபா

★

நாளொரு சங்கீதக் கச்சேரியும், பொழுதொரு சங்கீத விழாவுமாக வளர்ந்து வரும் மயிலை சங்கீத சபையாரின் இரண்டாவது ஸீரிஸ் கச்சேரிகளை நாளது ஜூலை மீ 16உ யன்று மகாகனம் ஸ்ரீனிவாச சாஸ்திரியாரும் மகாராஜபுரம் விசுவநாதய்யருமாகச் சேர்ந்து ஆரம்பித்து வைக்கிறார்கள். மகாகனம் ஸ்ரீனிவாச சாஸ்திரியாரின் பேச்சே ஒரு சங்கீதக் கச்சேரியாயிருக்கும் என்று அவருடைய பிரசங்கங்களைக் கேட்டவர்கள் சொல்வார்கள். சங்கீத வானத்தில் பிரகாசமான ஜோதி நட்சத்திரமாக வெகு காலம் விளங்கியவர் மஹாராஜபுரம் விசுவநாதய்யர். சிறிது காலம் ஒளிமங்கியிருந்த பின்னர் மீண்டும் திடீரென்று புதிய ஒளி பெற்று இந்த வருஷத்தில் அபாரமாகப் பிரகாசிக்கிறவர். பக்க வாத்தியங்களும் (சௌடய்யா — மணி) அன்றைக்குப் பிரமாதமாகச் சேர்ந்திருக்கின்றன. எனவே, ஜூலை 16உ மயிலை சங்கீத சபையில் ஒரே குதூகலமாயிருக்குமென்று நம்புகிறோம்.

-உம்மன்




கடன் கொடுத்த போதும் அதுவே!

ஆயிரம் கோடி ரூபாய்

# நிகழ்ச்சிச் சித்திரம்





















# கல்கி

மலர் 3 | தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார் | இதழ் 40


# என்ன சேதி?

## திவ்யமான நாடகம்

சென்ற ஜூன் மாதம் 30-ம் தேதி அமெரிக்காவில் பிரிட்டன் வுட்ஸ் என்ற புண்ணிய ஸ்தலத்தில் ஒரு திவ்யமான நாடகம் நடந்தது. அதை நடத்தி வைத்தவர் 'அங்கிள் ஸாம்' (அமெரிக்க மாமா) துரை. பிரதம நடிகர் ஜான்புல் துரை. இவர்களைத் தவிர, 44 சில்லறை நடிகர்களும் சேர்ந்து நாடகத்தைக் களை கட்டச் செய்தார்கள்.

சர்வதேச நாணயப் பரிவர்த்தனை மகாநாடு என்று அமெரிக்காவில் நடக்கிறதே, அந்தக் கேலிக் கூத்தைத்தான் இங்கே குறிப்பிடுகிறோம். "எல்லோரும் இன்புற்றிருக்க நினைப்பதுவேயல்லாமல் வேறொன்றறியேன் பராபரமே" என்ற உயர்வான எண்ணத்தோடுதான் இம் மகாநாடு கூட்டியதாக அறிவிக்கப்பட்டது. பின்வரும் இரண்டு உயரிய நோக்கங்கள் உலகெங்கும் பறை சாற்றப்பட்டன.

(1) யுத்தத்திற்குப் பிறகு, சர்வ தேச நாணயப் பரிவர்த்தனை விதத்தில் குழப்பம் ஏற்பட்டு, உலக வியாபாரம் கெட்டுப் போகாதபடி இப்பொழுதே பரிவர்த்தனை விதத்தைக் கட்டுப் படுத்துவதற்காக ஒரு மத்திய ஸ்தாபனத்தை அமைப்பது.

(2) யுத்தத்தில் கஷ்ட நஷ்டம் அடைந்த தேசங்களையும், ஏழ்மை நிலையிலுள்ள தேசங்களையும் கைதூக்கி விடுவதற்காக ஒரு சர்வ தேச பாங்கை அமைப்பது.

ஆஹா! எவ்வளவு உயர்வான எண்ணம்! உலக வியாபாரம் செழிப்பதில் எப்பேர்ப்பட்ட அக்கரை! இவ்வளவு உயர்ந்த லட்சியங்களுடன் நடக்கும் மகாநாட்டுக்கு ஸர் ரெய்ஸ்மன் தலைமையில் இந்தியப் பிரதிநிதிகள் கோஷ்டி ஒன்றும் போய்ச் சேர்ந்தது.

## நாடக சிகரம்

மகாநாடு ஆரம்பித்த சூட்டோடு சூடாக இந்தியப் பிரதிநிதிகள் ஒரு முக்கியமான தீர்மானத்தைக் கொண்டு வந்தார்கள். இவ்வளவு பெருபகாரிகள் உள்ள இடத்தில் இந்தியாவின் தேவையையும் அவர்கள் கவனத்துக்குக் கொண்டு வராமல் இருக்கக்கூடாதல்லவா?

"இந்த யுத்தத்தில் இந்தியாவுக்குச் சேர வேண்டிய கடன் தொகை 1000 கோடி ரூபாயும் ஸ்டர்லிங் நோட்டாக பிரிட்டனிடம் இருக்கிறது. அந்தப் பணம் அமெரிக்க டாலராக மாறினால் அமெரிக்காவிலிருந்து இயந்திரங்கள் வாங்கி இந்தியத் தொழில்களை வளர்த்துக்கொள்ள உதவியாயிருக்கும். இந்த சர்வ தேச நிதியின் மூலம் அப்படி மாற்றிக் கொடுங்கள்" என்பதுதான் அந்தத் தீர்மானம்.

பிரிட்டிஷ் பிரதிநிதிகளுக்கு வந்தது கோபம்! எழுந்தார்கள் பளிச்சென்று! தீர்மானத்தைத் தாக்கி நிறைவேறாமல் செய்து விட்டார்கள். அமெரிக்கப் பிரதிநிதிகள் பிரிட்டிஷ் பிரதிநிதிகளுடன் போட்டி போட்டுக்கொண்டு தீர்மானத்தைத் தாக்கித் தோற்கடித்த புண்ணியத்தைக் கட்டிக் கொண்டார்கள்.

தீர்மானத்தை நிராகரித்ததற்குக் காரணம் என்ன சொன்னார்கள் தெரியுமா? இந்த ஸ்டர்லின் கடன் விஷயம் இந்தியா – பிரிட்டன் விஷயமாம்! சர்வதேச நிதிக்கும் இதற்கும் சம்பந்தமில்லையாம். இரண்டாவதாக, 1000 கோடி கடனைத் தீர்ப்பதற்கு வேண்டிய அவ்வளவு ஆஸ்தி இந்த நிதியில் இல்லையாம். ஒரு பிரிட்டிஷ் பிரதிநிதி எல்லாவற்றையும் தூக்கி அடிக்கக் கூடிய ஒரு சமாதானத்தைச் சொன்னார். "இவ்வளவு பணத்தை வைத்துக்

# கல்கி

## பொருளடக்கம்

மலர் 3 }
இதழ் 40 }

1944 ஜூலை 16

{ தாரண ௵
{ ஆடி 1



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்களும், சம்பவங்களும் கற்பனையே




நீங்கள் வீட்டுக்குள் நுழைந்ததும், உங்கள் குழந்தை கையில் வில்லை எடுத்து வளைத்து டணுரென்று நாணேற்றி உங்கள் மேல் அம்புவிட்டால் எப்படி யிருக்கும்? இந்தக் குழந்தைகள் அவ்விதந்தான் அவருடைய தகப்பனாரை வரவேற்கின்றனவாம்! இந்த வில்லாளிக் குழந்தைகளின் தகப்பனார் வேறு யாருமில்லை; பிரசித்தி பெற்ற "ராமராஜ்யம்" படத்தின் ஆர்ட் டைரக்டரும், இந்தியாவின் புகழ் பெற்ற சித்திரகாரருமான ஸ்ரீ கனுதேசாய் அவர்கள்தான். "ராமராஜ்யம்" படம் பார்த்ததிலிருந்துதான் குழந்தைகள் மேற்படி விளையாட்டை மேற்கொண்டார்களாம். அதனால் அவர்கள் "லவ-குசர்கள்" என்ற பெயரும் பெற்றிருக்கிறார்களாம்!

லவகுசர்களைப்போல வீரப் புதல்வர்களாகக் கூடிய குழந்தைகள் பாரத நாட்டில் எத்தனையோ வருஷந்தோறும் பிறக்கின்றன. ஆனால் அவர்களை யெல்லாம் வீரக் குழந்தைகளாக வளர்ப்பதற்கு வசதிகள்தான் இல்லை. பாரத நாடானது சுதந்திர நாடாகும்போது, தேசத்தில் லட்சக் கணக்கான லவகுசர்கள் கிளம்பி இந்தப் புண்ணிய பூமியை வீர பூமியாக்குவார்கள்.



குளிர்ச்சியுடன் இருக்கச் செய்கிறது!



நான் களைப்படையாமல் இருக்கிறேன்!

வினோலியா அதிக சுகத்தைக் கொடுக்கக் கூடிய சோப். அதை உபயோகிப்பதனால் ஒவ்வொரு ஸ்நானமும் குளிர்ச்சியையும், உத்ஸாகத்தையும் உண்டு பண்ணுகிறது. இந்த சோப்பின் வாசனை களைப்படைந்த நரம்புகளுக்கு சோர்வை போக்கி சுகத்தைக் கொடுக்கிறது.



உத்ஸாகத்தைக் கொடுக்கிறது!




# வினோலியா ஒயிட் ரோஸ் சோப்பு

VWR, 43-60 TM VINOLIA CO. LIMITED, LONDON, ENGLAND




**P.A.ராஜு செட்டியார், பிரதர்**

தந்தி: ராஜா-கோயமுத்தூர்-போன். 218A

லோத்ரா

கர்ப்பாசயரோக
நிவாரணி

**கேசரி குடீரம் லிமிடெட், மதராஸ்**

தமிழ்நாடு ஏஜெண்டுகள் :

தோராமா ஜெனரல் ஸ்டோர்ஸ்

மேலக் கோபுர வீதி :: மதுரை.